

CHIEF MINISTERS OF ANDHRA PRADESH KARNATAKA AND MAHARASHTRA AT TIRUMALA







*பண்டிப் பெரும்பதியை யாக்கி பழிபாவம்*
*கொண்டிங்கு வாழ்வாரைக் கூறாதே எண்டிசையும்*
*பேர்த்தகரம் நான்குடையான் பேரோதிப பேதைகாள்*
*தீர்த்தகர ராமின திரிந்து*

*—இரண்டாம் திருவந்தாதி - 14.*

அவிவேகிகளே ! வயிற்றைப பெரிய ஊர் போலக் கண்டதையுங் கொண்டு நிரம்பச் செய்து வளர்த்து தெரியாமல் விளையுங் குற்றங்களையும் மேன் மேலும் வளர்ததுக் கொண்டு இவ்வுல கில வாழ்கினற ஸமஸாரிகளை புகழ்ந்து பேசுவதைத் தவிர்தது, உலகளந்த காலத்தில் எட்டுத் திக்குகளையும் பேர்த்துப் போடும்படி விம்மி வளர்ந்த நான்கு திருத்தோள்களை உடையவனான பெருமானுடைய திருநாமங்களை இடைவிடாது சொல்லிககொண்டு திவ்ய தேசங்கள் தோறும் ஸஞ்சரித்து (உங்கள் சஞ்சாரத்தாலே நாடு முழுவதும்) பரிசுத்தமாம்படி செய்ய வல்லவராக ஆகுங்கோள்.

# ஸப்தகிரி

ஜூன் - 1990

தனிப்பிரதி ரூ. 1 மலா 21

வருடச சந்தா ரூ. 12 இதழ் 1

## உள்ளுறை

பககம



### அட்டைப்பட விளக்கம்

| | |
|---|---|
| முனனட்டை | ஸபதகிரிக்கு வயது 21 —சிததிரம - கே. ஜெகதீஷ |
| முதல் உள்அட்டை | திருமலையில் தெனனகமுதலமைசசர்கள் மூவா |
| 2-வது உளஅடடை . | திருமலைப படிவிழா நிகழ்ச்சிகள |
| பின்னட்டை | ஸ்ரீ கல்யாண வேங்கடேஸவரர் சுவாமி கோயில — மங்காபுரம். |

சிறபபாசிரியர் .
திரு. எம். வி. எஸ் பிரஸாத், I A S.,
செயலாட்சித தலைவா,
தி.தி.தேவஸதானம, திருப்பதி.

ஆசிரியா
திரு. கே. சுபபாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸதான அசசகம,
திருபபதி.

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

Sasi

# உங்களுடன் . . . .

மகிழ்ச்சியும், கவலையும் வாழக்கையின இருபக்கங்கள். எனினும மகிழ்ச்சி ஏற்படும்போது உலகத்தை மறத்தலும், கவலை வருமபோது மனம குமைந்து விடுதலும மனிதனின பலவீனங்கள். இக்குறை மனிதனிடம் நிரந்தரமாக அமைந்து விடாமல், மனிதனை சாதாரண நிலையில் இயக்க வைப்பது காலமாகும. இக்காலமே ஒருவனின் இழந்த காலததை எண்ண வைககினறது: எதிர்க்காலததைப்பற்றிச் சிந்திக்க வைக்கினறது. நிகழகாலத்தை வகுத்துக் காட்டுகின்றது. இதனால, ஏறபட்ட குறைகளைக் களைந்து, நல்ல எதிர்காலத்தை உருவாக்கும் விதத்தில் நிகழ்காலத்தை செவ்வனே நடத்திச் செல்லவேண்டும்.

இந்தக் கண்ணோட்டத்தில் தான் ''ஸப்தகிரி'' பத்திரிகையினை தி. தி. தேவஸ்தான மேலாண்மை நடத்திச் செல்லுகினறது. 1949 - ஆம ஆண்டு ஒரு செய்தி இதழாக ஆரம்பிக்கப்பட்டு, பின்னா 1963 - இல் ஒரு பத்திரிகை வடிவம் பெற்று, 1970 - இல் ''ஸபதகிரி'' எனும பெயரில் ஒரு முழு இநது சமய பததிரிகையாக வெளிவந்தது. பின்னர் 1975 - இல் தமிழில தனியாக வெளிவரும் திங்கள் இதழாக மலாந்தது. அவவாறு 1970 - இல ''ஸப்தகிரி'' யாக வெளியிடப்பட்ட இப்பத்திரிகை இம்மாதம முதல் தன்னுடைய 21 - ஆவது ஆண்டில் அடியெடுத்து வைத்துளளது. ஆரம்பத்தில் நானகைந்து எழுத்தாளர்களின் படைப்புகளை மட்டுமே கொண்டு விளஙகிய ''ஸப்தகிரி'', இன்று எழுதும் ஆற்றல் மிகக, சமய உணர்வு மிக்க முதிர்ந்த எழுத்தாளர்கள் முதல, இலக்கியம் மறறும் சமய ஈடுபாடு கொண்ட மாணவர்கள் உள்ளிட்டு பல இளம் எழுத்தாளர்கள வரை பலரும எழுதும் கதை, கட்டுரைகளை, இன, இட வேறுபாடு காட்டாது, சனாதன தர்மத்தின பெருமையினை, சிறபபினை மனதிற்கொண்டே ''ஸபதகிரி'' யில் மேலாண்மை வெளியிட்டு வருகினறது. சமய கட்டுரைகளை வெளியிடும் ஒரு பத்திரிகையாக மட்டுமன்றி, திருமலைக்கு வருகை புரியும் ஆயிரக்கணக்கான யாத்திரிகப் பொதுமக்களின உணாவுகளை, எதிாபாாப்புகளை 'உஙகளுடன' எனும் தலைப்பில் வாய்ப்பு அமையும்போதெலலாம் ''ஸப்தகிரி'' வெளியிட்டு வந்துள்ளது. இக்கூறறினை உறுதிபபடுத்தும் வகையில், திருப்பதியை நாட்டின பல்வேறு பகுதிகளுடன் இணைத்திடும் வகையில கடநத 15 ஆண்டுகளாக பெருகியுள்ள இரயில போக்குவரத்துக்களும், பேருந்து போக்குவரத்துகளும், விமானப் போக்குவரத்துககளும சிறநத உதாரணங்களாக அமையும்.

இவ்வகையில அன்றைய தவழ்ந்த நிலையிலிருந்து, சமயததொணடு எனும் அரும்பணியில் அமைதியாக ஈடுபட்டு, இன்றைய பத்திரிகை உலகில் தனககென ஒரு தனி இடத்தைப பெற்று விளஙகி வரும் 'ஸப்தகிரி' யின வளர்ச்சியில் வாசகர்களும், விற்பனைப் பிரதிநிதிகளும வகித்த பங்கு மகத்தானது, மறக்க முடியாதது. அவ்வப்போது ஏற்படும் சில நிருவாகச் சிக்கல்களின் காரணமாக பலமுறை 'ஸப்தகிரி' தாமதமாக வெளிவந்த போதும். வாசகாகளும், விற்பனைப் பிரதிநிதிகளும் தொடர்நது காட்டி வநத ஆதரவே, அவர்கள 'ஸப்தகிரி' மீது கொண்ட பிணைபபினை எடுத்துக்காட்டும். ஆகவே மறறுமொரு புதிய ஆண்டில அடியெடுத்து வைக்கும் 'ஸப்தகிரி', களைய வேண்டிய குறைகளை மனதிறகொண்டு எதிாகாலத்தில இந்து சமய உணாவினை பல உளளங்களில் மேலும் வளர்த்திடும வகையில் தனது சமயப்பணியினை 'ஸபதகிரி' தொடாந்து ஆற்றி வரும் என்பதை மகிழ்ச்சியுடன கூற விழைகினறது.

மகிழச்சியைத் தெரிவிக்கும் ''ஸப்தகிரி'' அதே தருணதது அணமையில 'புயல' எனும் இயற்கை விதியானது ஆந்திர மாநிலத்தின கடலோரப பகுதிகளுககுச செயதிட்ட விபரீத பேரிழப்பை எணணிப பார்த்திடும ஒரு சோகச சூழ்நிலையில் தளளப்பட்டிருக்கினறது. சாதாரணமாக மழைக் காலஙகளில மட்டுமே ஆநதிர மாநிலததைப் பலமுறை பயமுறுத்தி விட்டுச செல்லும் புயலானது இம்முறை எதிாபபார்க்க முடியாத காலமான செனற மாதத்தின் போது தன்னால் முடிந்தவரை ஒரு சோக வடுவினை ஆந்திரமக்களின உணர்வுகளில ஆழமாக ஏறபடுததிச சென்றுளளது. - ஆந்திர மாநிலத்திறகு இப்போது ஏற்பட்டுளள உயிர் மட்டும பொருட் சேதத்தினை ஒரு தேசிய இழப்பாகவே இந்திய அரசு கருதியுள்ள இநநேரத்தில் பாதிக்கபபட்டவர்களுககு நாடு முழுவதிலிருநதும — பொது நிறுவனங்கள், அரசுத் துறைகள், தனி நபர்கள் ஆகியோரிடமிருநதும்-பொருள மறறும நிதிஉதவி வநது குவிவது, இந்திய மக்களின இரககஉணர்வினைப் படம பிடித்துக் காட்டுவதோடு, இந்தியாவின ஒருமைபபாட்டு உணாவினை உறுதிபபடுத்தும் வகையிலும் அமைந்துள்ளது, இவ்வகையில் தி.தி. தேவஸ்தானமும ரூபாய ஒருகோடியினைத தனனுடைய ஒரு பஙகாக அளித்ததை, பாதிக்கப்பட்டவர்களின கண்களிலிருநது வழியும சோகததுளிகளின ஒன்றினையாவது துடைததிட தனக்குககிடைததிட்ட ஒரு வாய்பபாகவே கருதுகினறது பாதிக்கபபட்டவாகளுககுக கிடைத்திட்ட பொருளுதவியும், ஆறுதலும் இழந்த மகிழ்ச்சியினை மீட்டுத் தராவிட்டாலும், நோநத இழபபால துக்கித்திடும மககளுககு தேவையான ஆனம பலததினை வழஙகிடும எனறே கருதுகினறோம்.

மனித வாழக்கை என்பது இன்பமும, துன்பமும கலந்த ஒருகலவையாகும. இவையிரணடையும் ஒன்றாகவே கருதும மனப பக்குவம மனிதனுக்குத் தேவை. இதனைத் தருவது காலமும் அது தநதிட்ட சமயமேயாகும. மனிதன் ஏறபடுத்திய சோகமானால சமய உபதேசங்களுக்கு ஒரு காலக் கட்டததில் பொருளிருககாது. ஆனால மனித சக்திக்கு மீறிய இயறகை செய்திட்ட அநீதியினால் ஏறபட்ட சோகத்திறகு மருந்து ஆன்ம உறுதிபபாட்டினை வழங்கிடும சமய உணர்வுகள மட்டுமேயாகும. ஆகவே உற்றாா, உறவினா மற்றும உடைமைகள இழந்து வாடிடும பாதிக்கப்பட்டவர்களுக்கு இத்தருணத்தில் மனோ பலம கிடைத்திட, இழந்த உயிாகளின் ஆத்மா சாநதியடைய எல்லாம வல்ல அவ் நெடியோனின பாத கமலங்களை, மேலாண்மை மற்றும் வாசகர்கள் சார்பில் ''ஸப்தகிரி'' அடிபணிந்து பிரார்த்திக்கின்றது.

# செய்திச் சுருக்கம்

## திருமலையில் முதலமைச்சர்கள் மூவர்

தெலுங்கு கங்கைத்திட்டம் சம்பந்தமாக ஆந்திர மாநில முதல்வர் திரு. மர்ரி சென்னாரெட்டி அவர்களும், கர்நாடக மாநில முதலமைச்சர் திரு. வீரேந்திரபாட்டீல் அவர்களும், மகாராஷ்டிர மாநில முதலமைச்சர் திரு. சரத் பவார் அவர்களும் 21-4-90 அன்று திருமலைக்கு வருகை புரிந்தனர். முதலமைச்சர்கள் மூவருக்கும் திருமலைக்கோயிலில் கோயில் மரியாதைகள் வழங்கப்பட்டு, தி.தி. தேவஸ்தான செயலாட்சித் தலைவர் திரு. எம். வி. எஸ். பிரஸாத், ஐ.ஏ.எஸ்., இணை செயலாட்சித்தலைவர் திரு. ஜனார்த்தன நாயுடு, ஐ. ஏ. எஸ்., உதவி செயலாட்சித் தலைவர் திரு. பட்டாபிராம ரெட்டி, கோயில் பெயிஷ்கார் திரு. பாலராமச்சந்திரய்யா, பொதுஜனத் தொடர்பு அலுவலர் திரு. ஆர். சூர்யநாராயண மூர்த்தி ஆகியோர்களால் வரவேற்கப்பட்டனர். அன்று மாலை திருமலைக்கோயிலில் பயன்படுத்தப்படும் எரிவாயு சம்பந்தமான சுமார் ரூ. 30 இலட்சம் செலவில் கட்டப்பட்ட எரிவாயு அபாய தடுப்பு நிலையம் ஒன்றினை திரு. எம். சென்னாரெட்டி அவர்கள் துவக்கிவைத்தார். பின்னர் தி. தி. தேவஸதானம் பிரசுரித்த சில தெலுங்கு சமய நூல்களை ஆந்திர முதல்வர் அவர்கள் வெளியிட்டார். முதல்வர்கள் மூவர்க்கும் தி. தி. தேவஸ்தானத்தின் சார்பில் சேஷவஸ்த்ரங்களும், கோவில் பிரஸாதங்களும், ஒலிப் பேழைகளும் வழங்கப்பட்டன. இவ்விழாக்களின் போது ஆந்திரமாநில அமைச்சர்கள் திரு. மாகன்ட்டி ரவிந்திரநாத் செளத்ரி, ஆர். செங்கா ரெட்டி அவர்களும், திரு. ரோஸய்யா அவர்களும் கர்நாடக மாநில அமைச்சர்கள் திருவாளர்கள் புட்டா சுவாமி கௌடா மற்றும் வீரப்ப மௌலி அவர்களும், மகாராஷ்ட்ரா அமைச்சர்கள் திருவாளர்கள் பத்மாசிங் பாட்டீல் மற்றும் ரஞ்சித்சிங் அவர்களும் மற்றும் சித்தூர் மாவட்டத் தலைவர் திரு நாகார்ஜுனா ஆகியோரும் கலந்து கொண்டனர்.

## துணைக் குடியரசுத் தலைவர்

26-4-90 அன்று திருமலைக்கு இந்தியத் துணைக் குடியரசுத் தலைவர் டாக்டர் சங்கர் தயாள் சர்மா அவர்கள் தன் குடும்பத்தாருடன் வருகை புரிந்தார். அன்று நடைபெற்ற பூலங்கி சேவை மற்றும் அடுத்தநாள் நடைபெற்ற அபிஷேகம் ஆகிய கோயிலில் நடைபெற்ற சமய நிகழ்ச்சிகளைக் கண்டுகளித்தார். 27-4-90 அன்று திருச்சானூர் ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயிலுக்கு வருகை புரிந்து அன்று கோயிலில் நடைபெற்ற அபிஷேக நிகழ்ச்சியில் கலந்து கொண்டார்.

## திருமலையில்

ஆந்திர மாநில ஆளுநர் திரு. கிருஷ்ணகாந்த் அவர்கள் தன் குடும்பத்தாருடன் 14-5-90 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். கோயிலில் ஆளுநர் அவர்கள் தி. தி. தேவஸ்தான உயர் அலுவலர்களால் கோவில் மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார்.

## புதிய பாதுகாப்பு அலுவலர்

தி. தி. தேவஸ்தானத்தில் புதிய பாதுகாப்பு அலுவராக திரு. வி. வி. எஸ். சர்மா அவர்கள் 16-5-90 அன்று பதவி ஏற்றுக் கொண்டார்.

## சலுகை

திருமலைக் கோயிலில் தரிசனத்திற்காக வரும் உடல் ஊனமுற்றோர்கள் ஒரு குறிப்பிட்ட காலநேரத்தின் போதுதான் இதுவரை தரிசனத்திற்கு கோவில் முகத்துவாரத்தின் வழியாக அனுமதிக்கப்பட்டு வந்தனர். இனிமேல், ஸர்வ தரிசனம் நடைபெறும் போதெல்லாம் உடல் ஊனமுற்றோர் கோயில் முகத்துவாரத்திலிருந்து நேரிடையாக தரிசனத்திற்கு அனுமதிக்கப்படுவர்.

ஃ ஃ ஃ

திருமலைக் கோயிலில் புதன் மற்றும் வியாழக் கிழமைகளில் முறையே ஸகஸ்ர கலஸாபிஷேகம் மற்றும் திருப்பாவாடை நடைபெறுவதற்கான ஏற்பாடுகளை மேற்கொள்ளும் போதெல்லாம் ஸர்வதரிசனம் சுமார் ஒரு மணி நேரம் நிறுத்திவைக்கப்படும். இனிமேற்கொண்டு இவ்விரு நிகழ்ச்சிகளின் ஏற்பாடுகளின்போதும் பொதுமக்கள் தரிசனத்திற்கு தொடர்ந்து அனுமதிக்கப்படுவர். இதனால் சுமார் 3000 யாத்திரிகர்களுக்கு அந்த ஒரு மணி நேர அவகாசத்தில் தரிசன வசதி கிடைக்கும்.



# சப்த மாதாக்கள்
# வரலாறும் வழிபாடும்

அன்னை வழிபாடு அகிலம் முழுவதும் பரவியுள்ளது. தாய் வழிபாடு உலகில் மிகவும் தொன்மையான ஒன்றாகும். இன்றும் பல்வேறு நாட்டினரும், சமயத்தினரும் பல்வேறு பெயர்களில் அன்னையை, சக்தியை, வழிபட்டு வருகின்றனர். சக்தி வழிபாட்டைச் சார்ந்தது சப்தமாதர் வழிபாடு. நம் சிவாலயங்களில் சப்த மாதர்கள் எழுந்தருளியிருப்பதை யாவரும் அறிவோம். இவர்கள் சப்த மாதா, மாத்ரிகா, சப்த கன்னிகா எனவும் அறிஞர்களால் குறிக்கப்படுகின்றனர். இவர்கள் யார்? இவர்களைப்பற்றிய வரலாறு யாது? பொதுவாக இந்துசமயக் கடவுளரின் திருவுருவங்களைப்பற்றி பலர்ஆழ்ந்த அறிவின்மை காரணமாக தவறான கதைகளையும், கருத்துக்களையும் பரப்பிவருகின்றனர். நாமும் சற்றும் சிந்தியாது இதனைக் கேட்டு சில சமயங்களில் அருவெறுப்படைவதுடன், அவமதிக்கவும் செய்கின்றோம். சப்த மாதர்களைப்பற்றி வராக புராணமும், தேவி மகாத்மியமும் பேசுகின்றன. வராக புராணம் யோகிஸ்வரியைச் சேர்த்து எட்டு அன்னையரைக் குறிக்கின்றது. பலரும் பொதுவாக தேவி மகாத்மியக் கதையையே எடுத்துக்கொள்கின்றனர்; பின்பற்றுகின்றனர்

**கதை:**

தேவி மகாத்மியம் கூறுவதாவது: இம்மகாத்மியம் மார்க்கண்டேய புராணத்தில் 13 அத்யாயங்களில் கூறப்பட்டுள்ளது. அசுரர்களால் துன்புற்ற தேவர்கள் இமயம் சென்று இறைவியைத் தொழுதனர். அப்போது அன்னையிடமிருந்து "கௌசிகீ" எனும் தேவி தோன்றினாள். தேவர்களை வதைக்க இமயம் சென்ற சண்டன், முண்டன் எனும் அரக்கரிருவர் தம் தலைவர்களாகிய சும்ப, நிசும்பர்களிடம் அன்னையின் பேரழகை எடுத்துக்கூறினர். அன்னையை மனைவியாக அடைய வேண்டுமென்னும் தீய ஆசை அரக்கர்கள்உளத்தில் உதித்தது. தூதுவிடுத்தனர்; பின்னர் "தூம்ரலோசனன்" எனும் சேனாதிபதி படைகளைத் திரட்டிக் கொண்டு அன்னையைப் பிடித்துவரச் சென்றான்; படையுடன் அழிந்தான். பின்னர் பெருஞ்சேனையுடன சண்டன், முண்டன் இருவரும் போருக்குப் புறப்பட்டனர். அன்னை சினங் கொண்டாள். அவளது நெற்றியிலிருந்து கரிய நிறத்துடன காளி தோன்றினாள். அவள் எதிர்த்து வந்த அரக்கர்கள் அனைவரையும் அழித்து ஒழித்து "சாமுண்டி" என்ற பெயரையும் பெற்றாள். சண்டிகா தேவியாகிய அன்னையை எதிர்த்துப் பெரும்படையுடன் சும்பன், நிசும்பன் போரிடச் சென்றனர். சண்டியும், காளியும் அரக்கர் சேனைகளுடன போரிட்டனர். பிரம்மன், சிவன, குமரன், விஷ்ணு, இந்திரன், வராகர், நரசிம்மர் ஆகியவர்களின் சக்தியும் தேவிக்கு உதவினர். அசுரர்களுக்கு உதவியாக 'இரத்தபீஜன்' என்ற மஹாசூரன் போருக்கு வந்தான். இரத்தபீஜனின உடலிலிருந்து சிந்தும் ஒவ்வொரு இரத்தமும் ஒவ்வொரு வீரனாக மாறிப் போரிட்டது. இரத்தபீஜனும், பின்னர் சும்ப நிசும்பர்களும் அரக்கர் படைகளுடன் அழிக்கப்பட்டனர்.

மற்றொரு கதை கூறுவதாவது: சிவபெருமான் அந்தகாசூரனுடன் போரிட்டார். அப்போது அவரது நாவில் தோன்றிய தீயில் யோகீஸ்வரி அவதரித்தாள். மற்றும் பிரம்மா, சிவன, விஷ்ணு, குமரன், இந்திரன், இயமன ஆகியவர்களின் சக்தியும் வெளிவந்து சிவபெருமானுக்குதவி அந்தகாசூரனை அழித்தனர்.

**வரலாறு:**

புராணக் கதைகளை விடுத்து இனி வரலாற்றின் வழி சப்தமாதர்களின் வழிபாட்டை நோக்குவோம். இந்திய நாகரீகத்தின் தொடக்க கால நகரம்-தொன்மை நகரம்-என ஆய்வாளர்களால் அறுதியிட்டுக் கூறப்படும், மொகஞ்சாதராவில் கிடைத்த குறியீடுகளில ஒன்று ஏழு கன்னியர்களைக் குறிக்கின்றது. வேத காலங்களில் தோன்றிய முதன்மையான ரிக் வேதத்தில "சப்தவாஹினிகள்" குறிக்கப்படுகின்றன. மஹாபாரதத்தில் சபாப் பருவத்தில் 'சப்தவிதானிகள' குறிக்கப்படுகின்றனர். குஷாணர் காலத்துச் சிற்பங்களில் அபய, வரத ஹஸ்தங்களுடன தங்களுக்குரிய ஆயுதங்களையும ஏந்தி அன்னையர் காட்சியளிக்கின்றனர். அவர்களின் வரிசையில் இரு புறங்களிலும் ஆயுதம்


திரு. சீ. இலட்சுமணன்,
சிங்கம்புணரி



மீனாட்சி கல்யாணம் - பட்டீஸ்வரர் ஆலயம் முன் வாயில் - பேரூர்.

ஏந்திய வீரர்கள் அமைக்கப்பட்டனர். குப்தர்கள் காலத்தில் வீரர்களுக்குப் பதிலாக வீரபத்திரரும், கணேசரும் இடம் பெற்றனர். பின்னர் சப்த மாதர்கள் வழிபாடு சாளுக்கிய மன்னர்களாலும் முற்கால பாண்டிய அரசர்களாலும், கைக்கௌள்ளப்பட்டன. கர்நாடகம், ஆந்திரா, தென் பாண்டிய நாட்டுக் குகைக் கோயில்களில், அழகு மிகுந்த அன்னையரை இன்றும் கண்டு கைதொழுது இன்புறலாம். தமிழகத்தில் சிறந்து விளங்கிய முத்தரையர்களும், சப்த மாதாக்களுக்கு சிறப்பளித்துள்ளனர் என்பதை அவர்களின் ஆலயங்கள் மூலம் அறிய முடிகிறது. குகைக் கோயில்களை அமைத்த பல்லவகாலத்தில் மாதாக்களின் சிலையைக் காண முடியவில்லை. ஆனால், கி.பி. 9-ம் நூற்றாண்டுக்குப் பின் அரசாண்ட பிற்காலப் பல்லவர்களாலும், சோழர்களாலும் இவ்வழிபாடு கைக்கொள்ளப்பட்டதை ஆலம்பாக்கம், வேளச்சேரி, திருத்தணி, திருவக்கரை, சிவபுரிப்பட்டி ஆகிய ஆலயங்களில் அமைந்துள்ள சிற்பங்களிலிருந்து அறியலாம். பௌத்த நூலாகிய சாதானா ஏழு பெண்டிருக்கு நடுவே ...ா காலரை அமைக்க வேண்டும் என்கிறது. ஜைன சமயத்தில் அம்பிகை எனும் தெய்வமும் ஏழு பெண்களுடன் அமைக்கப்பட்டுள்ளது என்பர் வடநாட்டு பானர்ஜி போன்ற ஆய்வாளர்.

## சிற்பத்தில் ஏழு அன்னையர் :

நமது சிவாலயங்களில் தெற்குப் பிரகாரத்தில் வடக்கு நோக்கி அன்னையர் திருவுருவங்கள் அமைக்கப்படுகின்றன. அவை முறையே பிராம்மி, மகேஸ்வரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, இந்திராணி, சாமுண்டி ஆகும். அவற்றிற்கு முதலில் வீரபத்திரரும், கடைசியில் கணேசரும் அமைக்கப்படுகின்றனர். காசிப சிற்ப சாஸ்திரத்தில் குறிப்பிட்டப்படி ஒவ்வொரு திருவுருவமும் நான்கு கைகளை உடையது. அபய வரத ஹஸ்தங்களுடன் தங்களுக்குரிய ஆயுதங்களையும் ஏந்தியிருக்கும். வேறு சில சிற்ப சாஸ்திரங்களில் பிராமிக்கு ஆறு கரங்களும், மகேஸ்வரிக்குப் பத்துக்கரங்களும், கௌமாரிக்கு பன்னிரண்டு கரங்களும் குறிக்கப்படுகின்றன. குஜராத், ஒரிஸ்ஸா மாநிலங்களிலுள்ள சிற்பங்களில் சப்த மாதாக்கள் இரண்டு கரங்களுடன், மடியில் குழந்தைகளுடன் அமைக்கப்பட்டுள்ளனர். ஆய்வாளர்கள் குழந்தைகளைத் தாயன்பின் அடையாளமாகக் கொள்கின்றனர். ஆந்திராவில் தாட்டேப்பள்ளி என்ற ஊரிலுள்ள சிவன் கோயிலில் சப்த மாதாக்கள் சிலை மூன்றே உள்ளன. மற்றவை காணாமற்போய்விட்டது. மூன்று சிலைகளும் தமக்குரிய வாகனங்களுடன் காட்சியளிக்கின்றனர். தமிழகத்தில் நெல்லை மாவட்டம் களக்காட்டில் அருள்மிகு சத்தியவாகீஸ்வரர் கோவிலிலும் அன்னையர்கள் தமக்குரிய வாகனங்களுடன் காட்சியளிக்கின்றனர். பல்லவ சோழர் காலச் சிற்பங்கள் நான்கு கைகளுடன் காட்சியளிக்கின்றன. ஆனால் கி. பி. 7, 8 ஆம் நூற்றாண்டைச் சார்நத பாண்டியரின் குடைவரைக் கோவிலாகிய, குன்றத்தூர் (மதுரை மாவட்டம், திருக்கோலக்குடி, (ப.மு. மாவட்டம்) ஆகிய இடங்களில் சப்த மாதாக்கள் இரண்டு கைகளுடன் விளங்குகின்றனர் என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

சப்த மாதர் வரிசையில் வீரபத்திரருக்குப் பதிலாக வீணாதர தட்சணா மூர்த்தியை அமைக்கும் வழக்கம் உண்டு. ஆனால் திருக்கோலக்குடி குகைக்கோயிலில் அந்த இடத்தை ரிஷபாருடன் சிவபெருமான் அடைந்துள்ளார். இது சிறப்பாகவும், குறிப்பாகவும் குறிப்பிடத்தக்கது. பசும்பொன மாவட்டத்தில் திருப்பத்தூரிலுள்ள சப்த மாதாக்கள் கோவில் பூமாயி அம்மன் கோவிலென்று வழங்கப்படுகிறது. ஆனால் சப்த மாதாக்கள் சிலைகள் அங்குள்ளன.

## சப்த மாதாக்கள் இலட்சணம் :

### வீரபத்திரர் :

நான்கு கைகள், மூன்று கண்கள், சடை, அபய வரத ஹஸ்தம், மேற் கைகளில் சூலம், கதை, வாகனம்-ரிஷபம். கொடி-ரிஷபம், மரம் ஆலமரம்.

### 1. பிராம்மி :

நான்கு முகங்கள், நான்கு கைகள், ஜடா மகுடம், அபய வரத ஹஸ்தம்,

மேற் கைகளில் சூலம், ஜபமாலை, அன்ன வாகனம், அன்னக்கொடி, அரச மரம்.

**2. மகேஸ்வரி :**

நான்கு கைகள், மூன்று கண்கள், அபய வரத ஹஸ்தம். மேற்கைகளில் சூலம், ஜபமாலை. வாகனம்-ரிஷபம். கொடி ரிஷபம். வில்வ மரம்.

**3. கௌமாரி :**

நான்கு கைகள், மூன்று கண்கள், சர்வாபரணம், கிரீடம, அபய வரத ஹஸ்தம், சக்திவேல், மலர். மயில் கொடி, மயில் வாகனம், அத்தி மரம்.

**4. வைஷ்ணவி :**

நான்கு கைகள், கீரீட மகுடம், பீதாமபரம், அபய வரத சங்கு சக்கரம். கருட வாகனம், கொடி சரக் கொன்றை என்னும் ராஜ விருட்சம்.

**5 வராகி :**

நான்கு கைகள், கரண்ட மகுடம், அபய வரத, கலப்பை, உலக்கை ஹஸ்தம், மகிஷதுவஜம், புங்க மரம்.

**6. இந்திராணி (ஐந்திரணி) :**

நான்கு கைகள், மூன்று கண்கள், கிரீட மகுடம், சகலாபரணம், அபய வரதம், சங்கு, வஜ்ர ஆயுதம், கஜ துவஜம், கஜ வாகனம், கலப விருட் சம்.

**7. சாமுண்டி :**

மேல் நோக்கிய கோசம், நான்கு கைகள், மூனறு கண்கள், புலிததோல் ஆடை, யானைத்தோல் போர்வை, சூல கபால அபய வரத ஹஸ்தங்கள், கடவாயிலில இரு வீரப்பற்கள், கபால மாலை, பயங்கரத தோற்றம. பிரேத வாகனம், ஆல மரம், வலக்கால் படுத்து இடககால் தொங்குதல்.

**கணேசர் :**

இருந்த நிலை, நானகு கரங்கள், அங்குச பாசம, ஒடிந்த தந்தம், மோதகம், பெருச்சாளி வாகனம்.



ஸ்ரீ விட்டலேஸ்வரர் திருக்கோயில் - பம்பாய் (சலவைக்கல் கோயில்)

**தத்துவ நோக்கில் அன்னையர் :**

சண்டன், முசுண்டன் எனும் அரக்கர்கள் முறையே மூளை பலமும், உடல் பலமும் உள்ளவர்கள் என்பதைக் குறிக்கின்றன. இரத்தபீஜன் தீய ஆசைகள். ஓர் ஆசை பல ஆசைகளாகப் பெருகுவதுதானே இயற்கை. இவற்றை அழித்தது ஏழு மாதாக்களாகிய சக்திகள். காமேஸ் வரியையும் சேர்த்து எட்டு ஆகும். அவையாவன:

| | | |
|---|---|---|
| யோகீஸ்வரி | — | காமம |
| பிராம்மி | — | மதம் |
| மகேஸ்வரி | — | குரோதம |
| கௌமாரி | — | மோகம் |
| வைஷ்ணவி | — | இலோபம் |
| இநதிராணி | — | மதாச்சரியம் |
| வராகி | — | அசுயை |
| சாமுண்டி | — | பைசன்யம் |

தீயவைகளை எதிர்த்துப் போரிடும் ஆத்ம வித்தைதான சப்த மாதாக்களின் போர் என்பார் டாக்டர் ஏ.வி. ஜெயச்சநதிரன், இவ்வுயரிய கருத்துககளை நமக்கு அறிவுறுத்தி நம்மை நல்வழிபடுத்தத் தான் அன்னை ஆலயத்தில் சப்த மாதாக்கள் சன்னதியை அமைத் துள்ளாள் போலும். யாரே அறிவர் அன்னையின் கருத்தை; அவள் திரு விளையாடலை.

ஓம் சக்தி

கட்டுரை அமைக்கக் கைகொடுத்த நூல்கள் :


1. Sakti—Dr A. V. Jayachandran.
2. Temples of South India—K. R. Srinivasan.
3. Administration and Social life under the Pallavas By Dr Meenakshi.
4. Sakthi Cult in Ancient India—Dr Pushpendrakumar.
5. Tantric Cult.—R Nagaswamy.
6. Journal of Tamil studies—Vol. II No. 1
7. Mother Goddess in Indian Art, Archeology and Literature — Dr Srivatsa.
8. Development of Religion in South India—Dr. K.A.N. Sastri.
9. தேவி மகாத்மியம்.
10. காசிப சிற்ப சாஸ்த்திரம்.
11. Early Chola Temple—S.R. Balasubramanian.


★

அகத்தும், புறத்தும் நிறைந்தவன் எம்பெருமான. அவன் என்றும் உள்ளவன்; எல்லாம் அறிபவன், ஓடியா இன்பப் பெருமையன. 'படியே இது என்று உரைககலாம் படியல்லன்': ஆனால் உணர்வுக்குத் தெரிவரும் பொருள்.

அவன் அனுபவமாகவே விளங்குவதால், அவனை உணரலாம். நாம் அவனை உணரும் போது, அந்நிலையில் நாம் இருப்பதில்லை. அவன் மட்டுமே எஞ்சி நிறகிறான். அவ்வனுபவத்தைப் பெற அவனருள் தேவை. அவனைப் பறறி அவனையே பெறும் மார்க்கம் பிரபத்தி என்று அழைக்கப்படும்.

# அதுவே வீடு

'உணர்வில் உம்பர் ஒருவனை
அவனது அருளால உறல பொருட்டு என்
உணர்வினுள்ளே இருத்தினேன்
அதுவும் அவனது இனனருளே'
(திருவாய்மொழி 8·8:3)

உணர்வது உயிர், உணராதது உடம்பு. சேதனம், அசேதனம் என்று இவறறை அழைப்பர். அறிவினால் உண்டாவது உணாவு, பரம்பொருளோடு கலந்து பெறுமஉணர்வு எல்லை கடந்தது.

" உணர்வும் உயிரும் உடம்பும் மறறு
உலப்பு இலனவும பழுதேயாம்
உணர்வைப் பெற ஊர்ந்து இறவேறி
யானும் தானாய் ஒழிந்தானே"
(திருவாய்மொழி 8.8.3)

அனுபவத்தைப் பெறுமுன்னர் உணர்வு, உயிர், உடம்பு, அழியாத பரம்பொருள என்ற வேறுபாடு உண்டு. ஆனால் அனுபவத்தில் இறைவன் மட்டுமே எஞ்சி நிற்கிறான். இருப்பது ஒரு பொருள். பினனர் வேறுபாட்டிற்கு இடமேது? அனுபவித்த பினனர் அப்பரம்பொருள் நமது உடம்பில், உயிரில், உணர்வில் கலந்து நிற்பது புரிகிறது. அவ்வனுபவத்தின் இனிமையும் அப்போது தெரிகிறது.

" தேனும் பாலும் கன்னலும்
அமுதுமாகித் தித்தித்து என்
ஊனில உயிரில் உணர்வினில்
நினற ஒன்றை உணர்நதேனே"
(திருவாய்மொழி 8.8.4)

அந்த அனுபவத்தைப் பெற்றவர் தாம் உணரலாமே தவிர அதனைப் பிறர்ககு அறிவித்தல் இயலாதஒன்று. அனுபவத்தைப் பெறறவரும் கூட அதுபற்றி மேலும் பகுததறிய முடியாது.

" நின்ற ஒன்றை உணர்ந்தேனுக்கு
அதனுள நேர்மை அது இது என்று
ஒனறும ஒருவர்க்கு உணரலாகாது
உணர்ந்து மேலும் காணபதரிது"
(திருவாய்மொழி 8:8:5)

உயிர் கொஞ்சம் கொஞ்சமாகச் சென்று பரம்பொருளோடு ஒன்றிக் கலக்கிறது. அது ஆறு கடலோடு கலப்பதைப் போன்றது. நனமை, தீமை என்ற இரணடையும் கடந்த நிலை அது. ஞானததையும கடநத நிலை அது. ஏனெனில தனி உயிர் என்ற உணர்வே அந்நிலையில் இல்லை.

" சென்று சென்று பரம்பரமாய்
யாதுமின்றித் தேயந்து அறறு
நன்று தீது எனறு அறிவரிதாய்
நன்றாய் ஞானம கடந்ததே"
(திருவாய்மொழி 8:8;5)

ஒப்பு:

'சென்று சென்று அணுவாய்த்
தேய்ந்து தேய்ந்து
ஒன்றாம் திருப்பெருந்துறை உறை
சிவனே'
(திருவாசகம்)

உயிரும் பரம்பொருளும் சேருவதை யோகம் என்றும கலப்பில் விளையும் அனுபவத்தைப் போகம் என்றும வழங்குவர். அறிவைக் கடந்த அந்நிலையில் உணர்வு மட்டுமே எஞ்சி நிற்கும். அதனைப் 'பாழ்' என்றும அழைப்பர். அதுவே வீடாம். விடுதலைப்பட்ட, முழுமையான இறுதிநிலையான அதனை வீடு என்பர்.

டாக்டர் தி நா. பிரணதார்த்தி ஹரன்
மதுரை.

" நன்றாய் ஞானம கடந்து போய்
நல்லிநதிரியம் எலலாம் ஈர்த்து
ஒனறாய்க் கிடந்த அரும் பெரும் பாழ்
உலபபிலதனை உணாநது உணர்ந்து
சென்றாங்கு இன்ப துன்பஙகள்
செற்றுக் களைந்து பசையற்றால்
அன்றே அப்போதே வீடு; அதுவே
வீடு வீடாமே"
(திருவாய்மொழி 8:8:6)

ஆகவே பற்றற்ற (பசையறற) நிலை பாழ் (வெளி) எனப்படும். அதுவே முத்தி நிலையாம. அப்போது உயிர் பற்றி நிற்பது பரம்பொருளை மட்டுமே, உணமையான இன்பம் அப்போது தான் கிட்டுகிறது. அதுவே நல்லுறைப்பு.



"திருவரங்கத்திலுள்ள திருமாலே! பச்சைப்பசேல்என்று இருக்கும்பெரிய மலையைப் போன்ற மேனியை உடையவனே! செக்கச் செவேல் என்று இருக்கும் பவளம் போன்ற வாயை உடையவனே! கொள்ளை அழகோடு தோன்றும் செந்தாமரைப் போன்ற கண்ணை உடையவனே! அச்சுதனே! அமரர்களின் தலைவனே! ஆயர்பாடியில் பிறந்து ஆயர்களோடு வளர்ந்த அன்புக் கண்ணனே! என்றெல்லாம் உன் அழகையும் அருமையையும் புகழ்ந்து மகிழும் மகிழ்ச்சியைத் தவிர எனக்கு வேறு என்னவேண்டும்? நூல்கள் கூறுகின்றன. அந்த நூறு ஆண்டுகளில் பாதியாகிய ஐம்பது ஆண்டுகள் உறக்கத்திலேயே கழிந்து விடுகின்றன. ஏதும் அறியாத பிள்ளைப் பருவத்தில பதினைந்து ஆண்டுகள் போய்விடுகின்றன. மீதமுள்ள ஆண்டுகளிலும், பெரும்பாலானவை நோயும் பசியும் முதுமையும் வாட்டும் துன்பத்திலேயே கழிந்து விடுகின்றன. ஆகவே இந்த மனிதப் பிறவி எனக்கு வேண்டவே வேண்டாம். பிறவா நிலையே எனக்கு வேண்டும்!" என்று சொல்கிறார் அவர்.

அவருக்கு உதவி செய்து வரத் தொடங்குகிறாள். ஒரு நாள் மழை பெய்துகொண்டிருந்த இரவு நேரத்தில் அவரை அணுகி அணைத்துக் கொள்கிறாள். அவரும் மகிழ்ந்து மயங்கிவிடுகிறார்

அவருடைய செல்வமெல்லாம் தொலைகின்ற வரையில் அவரோடு இருந்துவிட்டுப் பின் பிரிந்துபோய் விடுகின்றாள் அவள். ஆனால் அவளை மறக்க முடியாமல் அவளுடைய வீட்டு வாயிலில் சென்றுகிடக்கிறார் அவர்.

# எனக்கு இனி என்ன கதி?

திரு. நீ. தங்கவேலன,
வேலூர்.

இந்திரலோகம் சென்று ஆட்சி செய்கின்ற பதவியே எனக்குக் கிடைப்பதாயினும் வேண்டாம் என்றுதான் சொல்வேன்!" என்று பாடி மகிழ்பவர்தொண்டரடிப்பொடியாழ்வார்.

"பச்சை மாமலைபோல மேனி,
பவளவாய் கமலச் செங்கண்,
அச்சுதா! அமரர் ஏறே!
ஆயுர்தம் கொழுந்தே! என்னும்
இச்சுவை தவிர யான போய்
இந்திர லோகம் ஆளும்
அச்சுவை பெறினும் வேண்டேன்!
அரங்மா நகருளானே!"

"இந்த உலகத்தில் பிறந்தவர் அடைவது பெருகிய துன்பம்தான். பிறவாதவர் அடைவதுதான் பெரும்பேரின்பம்" என்று கூறுவார், மணிமேகலைக் காப்பியத்தில் சீத்தலைச் சாத்தனார்.

இறைவனிடத்தில் அன்பு கொண்ட அடியவர் அனைவரும் வேண்டுவது மீண்டும் பிறவாத நிலையைத்தான். தொண்டரடிப்பொடி ஆழ்வாரும் தமக்கு இனிப் பிறவி வேண்டாம் என்றே சொல்கிறார்.

" மனிதராகப் பிறப்பவர் நூறாண்டுகள் வாழலாம் என்று வேத

"வேத நூல பிராயம் நூறு
மனிதர் தாம் புகுவ ரேனும்
பாதியும் உறங்கிப் போகும்!
நின்ற இப் பதினை யாண்டு
பேதை பாலகன தாகும்
பிணி பசி மூப்புத் துன்பம்!
ஆதலால் பிறவி வேணடேன்!
அரங்க மா நகருளானே!"

விப்ரநாராயணர் என்ற இயற்பெயர் பெற்றவராய் முதலில் அவர் ஒரு நந்தனவனத்தை உருவாக்கி, நாள்தோறும் பூக்களைப் பறித்து மாலையாகத் தொடுத்து, திருமாலுக்குச் சாற்றக் கொடுத்து வருகிறார்.

உறையூரில் வாழ்ந்த சோழ மன்னனின் அரசவையில் நாட்டியம் ஆடிப் பரிசில் பெற்றுத் திரும்பும் தேவதேவி என்னும் தாசி அவருடைய நந்தவனத்தில் சிறிது நேரம தங்கியிருக்கிறாள். அவளைக் கண்டும காணாதவராக அவளிடம் பேசாமல் புறக்கணிக்கிறார் அவர். அதனால் அவரை எப்படியும் தனவயப்படுத்தவேண்டும் என்று முடிவு செய்கிறாள் அவள்.

அந்த நந்தவனத்திலேயே அவள் பணி செய்பவளாகத் தங்கியிருந்து

அவரை ஆட்கொள்ள விரும்பிய அரங்கன் ஓர் அந்தணர் வடிவம் கொண்டு, கோயில் இருந்த பொற்கிண்ணம் ஒன்றை எடுத்துச் சென்று தேவதேவியிடம், விப்ரநாராயணர் கொடுத்தனுப்பியதாகத் தருகிறார்.

பொற்கிண்ணத்தைக் காணாமல் தேடியவர்கள் அது அவளுடைய வீட்டில் இருப்பதைக் கண்டு, எப்படி வந்தது எனக் கேட்கின்றனர். விப்ரநாராயணர் கொடுத்தனுப்பியதாக அவள் கூறுகிறாள். அதனால் அவரை அழைத்துச் சென்று அரசனிடம் சொல்லிப், பொற்கிண்ணத்தைக் களவாடியதற்காகத் தண்டனை வாங்கித் தந்துவிடுகின்றனர். அவர் சிறையில் அடைக்கப்படுகிறார்.

பின்னர் அரசனின் கனவில் தோன்றி அரங்கன் உண்மையை உரைக்க, அவர் சிறையிலிருந்து விடுவிக்கப்படுகிறார்.

அந்நிகழ்ச்சிக்குப் பிறகுதான் அவர் தொண்டரடிப்பொடி ஆழ்வாராகி பிறவி என்கின்ற சிறையிலிருந்து விடுபட வேண்டி அரங்கன் மீது பாக்கள் புனையத் தொடங்குகிறார். பூமாலை தொடுப்பதோடு பாமாலை

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. காசு. |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன) | 0—50 |
| 2. | ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3 | அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. | பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. | இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. | நித்யாநுஸந்தானம் (வடகலே) | 4—00 |
| | நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8. | சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 3—25 |
| 9. | கண்ணன் பேசுகிருன் —நஜன | 0—50 |
| 10. | சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |
| 11. | முக்கவி கண்ட காப்பியம் — டாக்டர். டி. ஜி. அனந்த சுப்ரமண்யம் | 12—00 |

## சம்ஸ்கிருதம்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. | அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. | கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. | க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. | மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. | ப்ரஸ்னோபநிஷத் | 11—00 |
| 7. | ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. | சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. | தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. | பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "மக்கள் தொடர்பு அலுவலர், நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

யும் புனைந்து அரங்கனை வழிபடு கிறார்.

"மனத்தூய்மையும் இன் சொல் கூறுதலும் சினம் கொள்ளாமல் இருப் பதும் ஆகிய எந்தப் பண்பும் என் னிடம் இல்லையே! என்னை எப்படி கடைத்தேற்றப்போகிறாய் ?" என்று அரங்கனிடமே அவர் கேட்கிறார்.

ஒருவருடைய வாழ்க்கைக்கு அறத் தைவிட நன்மையானது எதுவும் இல்லை. அந்த அறத்தைப் போற றாமல மறப்பதைவிடக் கெடுதியான தும் இல்லை என்பார் திருவள்ளுவா.

அறம் என்பது என்ன என்றால் அழுக்காறு என்று சொல்லப்படும் பொறாமையும, அவா என்கிற பேரா சையும, வெகுளி என்கிற சினமும், கடுஞ் சொற்களாகிய இன்னாச்சொல் லும ஆகிய இந்நான்கு குற்றங்களுக கும் இடம் அளிக்காமல் அவற்றைக கடிந்து வாழ்வதுதான எனபாா அவர்.

சுருக்கமாகச் சொல்வதனால் ஒரு வன் தன் மனத்தில் எந்தக் குற்றமும் மாசும் இல்லாதவனாக இருப்பது தான் அறம். அதாவது மனத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்வது தான் அறம் என்பார்கள்.

தூய்மையான உள்ளத்தில்தான் உண்மை வாழும். உண்மையால்தான் மனம் தூய்மையாகும். புறத்தே நம் உடலின் தூய்மை எப்படி நீரால் அமைகிறதோ, அப்படி அகமாகிய நம் மனத்தின் தூய்மை வாய்மையால் தான் அமைகிறது என்பார்.

''புறந்தூய்மை நீரான அமையும
அகநதூய்மை
வாய்மையால் காணப்படும்''.

—குறள்-298.

இறையடியார்களின் மனத்தில் இருக்க வேண்டிய அத்தூய்மை என் மனத்தில் இல்லையே என்று வருந்து கிறார் தொண்டரடிப்பொடி ஆழ் வார்.

"மனத்திலோர் தூய்மை இல்லை"

எப்போதும் உமிழ் நீர் என்கின்ற தண்ணீரிலேயேதான் இருக்கிறது நாக்கு என்றாலும் அந்த நாக்கிலிருந்து பிறக்கின்ற கடுமையான சொற்கள் நெருப்பைவிட மிகுதியாகச் சுடுகின்றன.

தீயினால் சுட்டப்புண், வெளியே வடு இருப்பினும் உள்ளே ஆறிவிடுகிறது. ஆனால் நாவினால் சுடு சொல் கூறிச் சுட்ட புண்ணே வெளியில் வடுவை ஏற்படுத்துவதில்லையென்றாலும் உள்ளே ஆறுவதே இல்லை. ஆகவே நாம் எதனைக் காக்கவில்லை என்றாலும் நாவைக் காக்க வேண்டும். நம் நா கடுமையான சுடு சொறகளைக் கூறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும என் பார் திருவள்ளுவர்.

ஒருவருக்குப் பொன்னாலும் மணியாலும் ஆன அணிகலன்களைவிடச் சிறந்த அணிகலன் யாரிடத்திலும் பணிவோடு நடந்து கொணடு இனிய சொற்களைப் பேசுவதுதான்.

மனம் மகிழ்நது பிறருக்கு ஒரு பொருளைக் கொடுக்கின்ற ஈகைக் குணம் ஒருவரிடம் அமைவது நல்லதே. ஆனால் அதைவிட நல்லது, முகமலர்ச்சியோடு ஒருவரைப் பார்த்து இனிய சொற்களைப் பேசுவதுதான்.

முகத்தால் விரும்பி இனிமையாகப் பார்த்து, அகத்திலிருந்து வெளிப்படுகின்ற இனிய சொற்களைக் கூறும தன்மையில் உள்ளதுதான் அறம் என்பது எனறெல்லாம் "இனியவை கூறல்' என்னும் அதிகாரத்தில் விளக்கிச் சொல்லுவாா அவர்.

"முகத்தான் அமர்ந்து இனிது
நோக்கி அகத்தானாம்
இன்சொ லினதே அறம்"
—குறள்-93.

சிவப்பிரகாச சுவாமிகள் நன்னெறிப் பாடல் ஒன்றில் "வெப்பமான கதிர்களையுடைய கதிரவனின் வரவைக கணடு கடல் பொஙகுவதில்லை. தண்மையான கதிர்களையுடைய நிலவின் வரவால்தான் அது மகிழ்ந்துபொங்குகிறது. அதுபோல அககடலால் சூழப்பட்ட உலகமும் இனிமையான சொற்களைக் கேட்டுத்தான் மகிழும். வன்மையான கடுஞ்சொற்களைக் கேட்டு என்றுமே மகிழாது" என்று சொல்லுவார்.

அத்தகைய இனிய சொற்கள் என் வாயிலிருந்து வருவதில்லையே என்று வருந்துகிறார் தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

"வாயிலோர் இன் சொல் இலலை!"

சினம் என்பது மறறவர்களுக்கு மட்டுமே கேடு செய்வதில்லை. சினம் கொண்டவனுக்கும் கேட்டையே செய்கிறது.

சினம் கொண்டவனுடைய முகத்தில் மலர்ச்சியைப் பார்க்க முடியுமா? முகமலர்ச்சியையும் மனமகிழ்ச்சியையும் ஒருங்கே அழித்துவிடுகின்ற சினத்தைக்காட்டிலும் ஒருவருக்குக் கேடு

# தெரிந்து கொள்ளுங்கள்

குழந்தை பிறந்ததும் நாம் அப்போதுள்ள நவக்கிரகங்களின் நிலை அறிய ஜாதகம் எழுதுகிறோம்.

நவக்கிரகங்களின் பிறநத நாள் விபரம் உங்களுக்கு தெரியுமா!? இதோ தெரிந்து கொள்ளுங்கள்.

சூரியன்: பிரபவ வருஷம் மாசி மாதம சுக்ல பட்ச சப்தமி, கிருத்திகை நட்சத்திரம், ஞாயிற்றுக் கிழமை சுபஜெனனம்.

சந்திரன்: சௌமிய வருஷம், கார்த்திகை மாதம் சுக்ல பட்சம் தசமி திதி, உத்திரட்டாதி நட்சத்திரம், திங்கள் கிழமை சுபஜெனனம்.

செவ்வாய்: ராட்சஸ வருஷம், ஆடி மாதம் கிருஷ்ணபட்சம் சதுர்த்தசி திதி, மிருகசிரீஷம் நட்சத்திரம், செவ்வாய் கிழமை சுப ஜெனனம்.

புதன்: ஆங்கீரஸ வருஷம், மார்கழி மாதம் சுக்ல பட்சம் ஸப்தமி, பூரட்டாதி நட்சத்திாம், புதன் கிழமை சுபஜெனனம.

குரு: தாது வருஷம், வைகாசி மாதம் கிருஷ்ண பட்சம் சதுர்தசி, பரணி நட்சத்திரம், வியாழக்கிழமை சுபஜெனனம்.

சுக்கிரன்: பார்த்திப வருடம், ஆவணி மாதம் சுக்லபட்சம், துவாதசி திதி, கேட்டை நட்சத்திரம், வெள்ளிக்கிழமை, சுபஜெனனம்.

சனி: பிரமோதூத வருஷம் தை மாதம் கிருஷ்ணபட்சம் சதுர்தசி திதி ரேவதி நட்சத்திரம் சனிக்கிழமை ஜெனனம்.

ராகு: ராட்சஸ வருஷம், பாத்ரபத மாதம், கிருஷ்ணபட்சம், சதுர்தசி திதி, ரேவதி நட்சத்திரம், ஞாயிற்றுக்கிழமை ஜெனனம்.

கேது: ராட்சஸ வருஷம், சைத்ர மாதம், கிருஷ்ணபட்சம், சதுர்தசி திதி ரேவதி நட்சத்திரம், திங்கட் கிழமை ஜெனனம்.

தொகுப்பு: சோ. ரங்கசுவாமி-நாட்டரசன் கோட்டை.

செய்யத்தக்க பகை வேறு உள்ளதோ? என்று கேட்பார் திருவள்ளுவர்.

ஒருவன் தன்னைக் காததுக் கொள்ள வேண்டும் என்றால் அவன் சினத்துக்கு இடம தராமல் காத்துக் கொள்ளவிலலையென்றால், அந்தச் சினம் அவனையே கொனறுவிடும்.

கொழுந்து விட்டு எரிகின்ற நெருப்பில் தோய்த்து எடுப்பதைப்போன்ற துன்பத்தை ஒருவர் நமக்குச் செய்த போதிலும், அப்போதும் அந்த நிலையிலும் கூடுமானால் சினம் கொள்ளாமல் இருப்பதுதான் நலலது.

ஒருவன் உள்ளத்தில சினத்தை எண்ணாமல் இருப்பானானால் அவன நினைத்த நன்மைகள் அனைத்தையும் ஒருங்கே பெறுவான் என்றெல்லாம் 'வெகுளாமை' என்னும் அதிகாரத்தில் அவர் சினம் கொள்ளாத தன்மையின சிறப்பினைக் கூறுவார்.

"உள்ளிய தெலலாம் உடன் எய்தும்
உளளத்தால்
உள்ளான் வெகுளி யெனின்"

குணம் என்கின்ற குன்றின் மேல் ஏறி நிற்கின்றவர்களுக்குச் சினமே வராது. தவறி வந்தாலும் ஒரு கணத்துக்கு மேல் அவரிடம் நிற்காது என்று அவர் மேலும் கூறுவார்.

பணபு நிறைந்த சான்றோர்க்கு சினம் வராது அப்படி வந்தாலும் அது தண்ணீரில் ஓர் அம்பை எய்வதால் நீர்ப்பரப்பில் உணடாகும் வடு எவ்வளவு விரைவில் மறைந்துவிடுமோ அவ்வளவு விரைவில் மறைந்துவிடும என்பார் ஔவையார்

உள்ளத்தில் கனன்று எழுந்து வெளிப்படுகின்ற பொல்லாத சினத்தை அடக்கிக் கொள்ளுகின்ற குணம்தான் சிறந்த குணம் என்பார் சிவப்பிரகாச சுவாமிகள்.

"சினத்தை அடக்கிக் கொள்ளுகின்ற அந்த நல்ல குணம் என்னிடம் இல்லையே! சினத்தினால் பிறர்மீது கறுவு கொண்டு பிறர்க்கும் கெடுதியைச் செயது நானும் அலலவா கெடுகிறேன்" என்று வருநதுகிறார் தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

"சினத்தினால செறறம நோககித்
தீவிளி விளிவன"

இவ்வாறு "நான் மனத்தில் தூய்மை இல்லாதவனாக இருக்கிறேன். என் வாயினால் இன் சொல் கூறாதவனாக இருக்கிறேன். சினத்தினால் கறுவு கொணடு பிறர்க்குத் தீமை செய்பவனாக இருக்கிறேன். எனக்கு இனி என்ன கதி? எனனை எப்படிக் கடைத்தேற்றப் போகிறாய் சொல்! எனனை ஆட்கொண்ட தலைவனே! துளசிமாலை அணிந்தவனே! பொன்னியாறு சூழநது செல்லும் திருவரங்கத்தில் உள்ளவனே!" எனறு பாடுகிறார் தொண்டரடிப்பொடி ஆழ்வார்.

"மனத்திலோர் தூய்மை இல்லை
வாயிலோர் இன்சொல் இல்லை
சினத்தினால செற்றம் நோக்கித்
தீவிளி விளிவன் வாளா
புனத்துழாய் மாலையானே!
பொனனி சூழ் திருவரங்கா!
எனக்(கு) கதிஇனி என்?
சொல்வாய்!
என்னையாளுடைய கோவே!"

இந்தப் பாடலின் மூலம், மனத தூய்மையும், இன சொல்லும், சினம் இனமையும்தான் ஒருவரை உயர்கதி அடையச செய்யும என்று அவர் தெளிவாகச் சொலலுகிறார்.



# பன்னிரெண்டின் பெருமை

1. மாதங்கள் பனனிரணடு.

2. இராசிகள் பன்னிரணடு.

3. ஆறுமுகனின் திருக்கரங்கள் பன்னிரணடு.

4. ஐந்து பன்னிரண்டு ஆணடுகள் கொண்டது தமிழ் ஆண்டு.

5. பாணடவர் வனவாசம் செய்தது பன்னிரணடு ஆண்டுகள். (இதில் ஒரு வருட அஞ்ஞாத வாசம் அடங்காது.)

6. நம் பாரதத்தில் பன்னிரண்டு ஜோதிர்லிங்க சிலத்தலஙகள் உள்ளது.

7. ஒன்பது பன்னிரண்டு திவ்ய தேச தலங்களே விஷ்ணுவின் 108 தலங்களாக உள்ளன.

8. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை வட இந்தியாவில் (அலஹாபாத்) கும்பமேளா நடைபெறுகிறது.

9. பன்னிரணடு ஆண்டுகளுக்கு ஒரு முறை தமிழ்நாட்டில் (கும்பகோணம்) மாமாங்க உத்சவம் நடைபெறுகிறது.

10. பன்னிரண்டு ஆணடுகளுக்கு ஒருமுறை கர்நாடக மாநில கோகர்ணத்தில் ஆத்மலிங்க ஈஸ்வரர் (மஹாபலேசுவரர்) வெளியே எடுக்கப்பட்டு பூஜை நடைபெறுகிறது.

11. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை திருக்கழுகுன்றத்தில் (தமிழ்நாடு) குளத்தில் சங்கு உறபத்தியாகிறது.

12. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குறிஞ்சிமலர் பூக்கின்றது.

தொகுத்தவர்:
திரு. ஆர். எஸ். சுப்ரமணியம், குடியாத்தம

# திறல் விளங்கு மாருதி

'அரசமர்ந்தான் அடிசூடும் அரசையல்லால் அரசாக எண்ணேன் மற்றரசு தானே' என்று 'தில்லை நகர் திருச்சித்திரகூடம் தன்னுள் திறல் விளங்கு மாருதியோடு அமர்ந்தான் தன்னை' இனிதமர்ந்த ராமனாக தில்லை கோவிந்தராஜன் திருவடிப் புகழ் பரப்பிய, புனர்வசுவில் அவதரித்த பிறவிப் பெருமையும், கௌஸ்துபாம்சமாய் விளங்கும் எம்பெருமானின் அம்சம் கொண்ட பெருமையும் நிறைந்த குலசேகரப் பெருமான், தில்லையில் (சிதம்பரத்தில்) கோவிந்தராஜனை கோதண்ட ஹஸ்தனாக, ஸ்ரீராமனாக காட்சி அருளப் பெற்று, 'செங்கணெடுங் கருமுகில் இராமன்'. 'எவ்வரிவெஞ்சிலைத்தடக் கை இராமன்' என்றெல்லாம் ஸூக்திகளால் பெருமாள் திருமொழி, பத்தாம் திருமொழி 'அங்கணெடு மதிள்' என்று துடங்கி 11 பாட்டுகளில் ஸ்ரீமத் ராமாயணத்தை கதைச் சுருக்கமாக, ராமாயண ஸாரமாக அருளிச் செய்து ஸ்ரீராமன்பால் ஆழங்கால் பட்டவர்.

இப்பெருமானே "கன்னி நன்மா மதிள்புடை சூழ்" திருக்கண்ணபுரத்தில் ஸ்ரீசௌரிராஜப் பெருமாளை, இராகவனே! தாசரதீ! சீராமா! அயோத்தியனே! என்று ஸ்ரீராமபிரானாக தரிசிக்கப்பெற்று, விசுவாமித்திரர், கோசலை, கைகேயி, தயரதன், இவர்கள் ஸ்ரீராமனுக்கு தாலாட்டு பாடி மகிழ்ந்தனரோ, இல்லையோ என்று உளம் உருகி 'மன்னுபுகழ் கோசலை தன் மணி வயிறு வாய்த்தவனே' என்று துடங்கி 11 பாட்டுக்களில் ஸ்ரீராமாயண சரிதச் செய்திகளையும், சிறப்பாக, 'தங்கு பெரும் புகழ்ச் சனகன் திருமருகா' என்று மைதிலியை மணம் புணர்ந்த' — ஸீதா கல்யாண செய்தியையும் பாடி மகிழவெய்திப் போந்தார்.

இனி இவ்வாழ்வார் அருளிச் செய்த ஸ்ரீராமாயண ஸாரமான இப்பிரபந்தத்தை ஆராய்வது சிறப்பான சில நுட்பங்களை இவர் அருளியுள்ளது புலனாகும். முன்னரே குறிப்பிட்டுள்ளபடி இத்திருமொழி 'அங்கணெடு மதிள் புடைசூழ் அயோத்தியென்னும் அணிநகரத்து உலகனைத்தும் விளக்கும் சோதி' என்று துடங்கி 11 பாட்டுகளில் சில ராமாயண சரித அரிய செய்திகளைவிளக்குவதாக அமைந்துள்ளது.

திரு. ஏ. வி. ராமகிருஷ்ணன்,
*சிதம்பரம்*

'அஞ்சிலே ஒன்று பெற்ற' அனுமன் 'அயலார் ஊரில் அணங்கைக் கண்டு' தூது போயினான். இத்தூதனுடைய குறிப்பான பணி சீதா பிராட்டியைக் கண்டு பிடித்து இடம் அறிந்து, சந்தித்து, அடையாளம் மொழிதலே. இதன் பொருட்டே ஸ்ரீராமபிரான் 'இத்தகையால் அடையாளம் ஈது அவன் கை மோதிரமே' என்று அனுமன் கையில் மோதிரத்தை அடையாளமாய் அருளிச் செய்தான். இங்ஙனம் அனுமன் பணி குறிப்பிட்ட எல்லைக் கோட்டில் அமையும். தூதன் என்ற நிலையில் இது மேலும் ஒரு நெறிக் கோட்பாட்டில் அடங்கும். அனுமன் இப்பணியைச் செவ்வனே செய்து முடித்தான். சீதாபிராட்டிக்கு நற்செய்திகள் கூறி ராமபிரானுக்கு அடையாளங்களும் பெற்றான். இதன் மேல் அவன் செய்கைகள் தூதுப்பணி வரம்பை மீறியவை என்றுகொள்வது இயல்பே. இராவணனை நேரில் கண்டு, அறவுரைகள் கூறி அவன் அழிந்து படாமல் போக, சந்திப்பை ஏற்படுத்திக் கொண்டு, அவ்வாறு சந்தித்து நேர்முகமாக, அவன் நாசம் எய்தும் விளைவுகளையும், இராவணன் புரிந்த தவறுகளையும் விளக்கமுற கூறினான். இதையும் தூதுப்பணியின் இயல்பான காலம், தேசம், வர்த்தமானம், இடம், பொருள், ஏவல் என்று கொள்ளத் தகுந்தாலும் இலங்கையை எரியூட்டுதல், தன்பணி முடிந்துப் போன நிலையில் எதிரியின் ஊரை தூது சென்றவன் அழித்தல் எவ்வாறு பொருந்தும்? இது இராமபிரான் அனுமனுக்கு இட்டுள்ள பணி வரம்பில் அடங்குமா! இராமபிரானின் ஆணை ஏவல் இல்லாத இச்செயல், தூதுபணி வரம்பை மீறிய அனுமன் செயல் ஆகுமே என்று ஐயப்பாடு ஏற்படுவது இயல்பே.

இதன் தொடர்பான செய்தியில் மேலே கூறிய 'அங்கணெடு' திருமொழியில் 6-வது பாட்டில் குலசேகரர் அருளிய சிறப்புச் செய்திகள் பயின்று இன்புறத்தக்கன. இலங்கையை எரியூட்டிய பணியும், இராமபிரான் அனுமனுக்கு தூதனாக இட்ட பணித்தொகையில் அடங்கும். இலங்கையை எரியூட்டியது இராமபிரான் திருவுள்ளத்துக்கு இசைந்ததே. அனுமனுக்கு பணியிட்டருளிய இராமபிரான் இப்பணியையும் அருளினார் என்பதே குலசேகரர் திருவுளம் பற்றிய உளக்கிடக்கை. இச்செய்தியை விளக்கும் மேற்படி 6-வது பாட்டு பின்வருமாறு: இதில் இப்பெருமான் ஸ்ரீமத் ராமாயண, ஆரண்ய காண்ட கிட்கிந்தா காண்ட சரித செய்திகளுடன் சுந்தரகாண்ட செய்தியையும் யும் கோடிட்டு அருளியுள்ளார்.

" தனமருவு வைதேகி பிரியலுற்றுத்
தளர்வெய்திச் சடாயுவை
வைகுந்தத் தேறறி
வனமருவு கவியரசன் காதலகொண்டு
வாலியைக்கொன்று இலங்கை
நகர் அரக்கர்கோமான்
சினமடங்கமாருதியால் சுடுவித்தானைத்
தில்லைநகர் திருச்சித்திர கூடம
தன்னுள்
இனிதமர்ந்த அம்மானை இராமன்
தன்னை
ஏத்துவார் இணையடியே
ஏத்தினேனே."

(பெருமாள் திருமொழி — 10-வது திருமொழி - 6 வது பாட்டு)

இப்பாட்டில் உள்ள 'மாருதியால் சுடுவித்தானை' என்ற சிறந்த சொற்றொடரை குலசேகரர் உணர்ந்தனுபவித்துப்பெய்துள்ளார். வால்மீகியின் முனி ஹ்ருதயத்தை-உளக்கிடைகையை உணர்த்துவதில் குலசேகரரின் இச்சொற்றொடர் மிக அருமையாக அமைந்துள்ளது; படித்து, உணர்ந்து இன்புறவேண்டியது.

இனி சுடுவித்தானை என்ற சொல்லுக்கு பொருள் ஆராயுங்கால், கற்றல் என்பதும் கற்பித்தல் என்பதும் உணர்தல், உணர்த்துதல், மற்றும் விளங்குதல், விளக்குதல் என்பன போன்று செயப்படுவினையை செய்யத் தூண்டுவதை, செய்யச் செய்வதை உறுதியிட்டு காட்டுவது. சுட்டானை எனபது சுடுவதை குறிககும்போது 'சுடுவித்தானை' என்பது சுடச் செயதானை என்று பொருள்படும். இத்துடன் துடரும் மேல் வரிகளைக் காணின் 'சினமடங்க மாருதியால சுடுவித்தானை, தில்லை நகர்ச் சித்திரகூடம தன்னுள் இனிதமர்ந்த அம்மானை இராமன் தன்னை' எனறு சுடச்செய்த இராமனின் திருவடி புகழ்வேனே என்று குலசேகரர் குறிப்பாக விளக்கமுற அருளியுள்ளார். சுடச்செய்தவன் இராமன், மாருதியால் சுடுவித்தான் என்று கூறுவதுமிக அரியகுறிப்பு.இத் திருமொழியில் உள்ள 11 பாட்டுக்களில் மிகஅருமையாக, 3 பாட்டுகளில் மட்டுமே 'இராமன்' என்று கூறுவார். 1, 3, 6 பாட்டுக்களில் பெய்துள்ள இந்த 'இராமன' என்ற பெயர்க் குறிப்பில் 'இனிதமர்ந்த அம்மானை இராமன் தன்னை' என்று இணைத்து கூறியுள்ளது மிகச்சிறப்பான அருளிப்பாடு. ஆக இராமன் சுடுவித்தான் மாருதியின் மூலம் என்பது வெள்ளிடைமலை. இராமன் ஆணையில் இலங்கையை சுட்டெரித்தலும் அடங்கும் என்ற அரிய செய்தியை இவ்வாழ்வார் இனிமையாக அருளியுள்ளார்.

இது இவ்வாழ்வார் தானே கற்பனையில் கூறுவரோ என்று ஐயுற வேணடா. மூலநூலில் வால்மீகி முனிவர் குறிப்பிடும் செய்தியை ஒட்டியே இவ்வாழ்வார் விளக்கமுற செய்வது இன்னும் அருமை.

கபந்தன் கோரியபடி ஸ்ரீராம பிரான அவனைக் குழியில் தள்ளி தகனம் செய்தார். தன் சாபம் நீங்கி திவ்யரூபம், தேஜஸ், ஞானம், பெற ஸ்ரீ ராமன் கையால் தகன க்ரியை பெறின் தான் ராமபிரானுக்கு (சுக்ரீவன் பற்றி கூறி) உதவி செய்ய முடியும் என்று கபந்தன் வேணடியதற்கு இணங்க, ஸ்ரீராமபிரான் தன் தந்தைக்கும் செய்ய முடியாது போன, செய்யாத, தகன காரியத்தை (முன்பு ஜடாயுவுக்கு முதலில் செய்தும் இப்போது கபந்தனுக்கு இரண்டாவது காரியமாக) செய்து அருளினார். கபந்தன்மூலம் சுக்ரீவனை பற்றி அறிந்தார். கபந்தன் சொன்ன வழியிலேயே சென்று சுக்ரீவனை அடைந்து ஸீதையை தேடும் முயற்சி செய்ய வேண்டியவரானார். கபந்தனுக்கு சிதையை செய்து முடித்து, இலக்குவன் அதனை எரியூட்ட இத்தகன ஸம்ஸ்காரம் இராமன் அருள நன்கு நிறைவுற்றது. இதில் ஆச்சரியம் கொண்ட இலக்குவன் இங்கு இராமனிடம் கூறிய

சொல் சிறப்பான குறிப்பை உணர்த்துவது.

'' ததோ ஜடாயு· பூர்வம்து ஸீதாம
அன்வேஷதா த்வயா
அயம்த்விதீயோ நிதக்த: த்ருதீயம
கிம்னு வக்ஷயஸி ''

(ஆரண்ய 72-5)

பொருள: = ஸீதாபிராட்டியை தேடி வரும் தங்களால் முன்பு ஜடாயு தகனம் கணடார், இரண்டாவதாக இங்கு இவன் (கபந்தன்) தங்களால் தகனம் பெற்றுய்ந்தான். மூன்றாவதாக தேவரீர் எதை (எரியூட்டு தலை) அருளிச்செய்யப் (உள்ளீரோ) போகிறீர்? எனறு இலக்குவன இராமனிடம் கேள்விக் குறிபபாகவே வினவுகிறான். இந்த ச்லோகத்தில் முதவில் ஜடாயு, இரண்டாவது கபநதன் முன்றாவது எத்தகையது? யாது? என்றவினாக்குறிப்பு குலசேகரப்பெருமானின் திருவுளப்பாங்கின் வாயிலாக காணும் பெருமான், மூன்றாவதாக, மாருதியால் சுடுவிக்க திருவுளம் பற்றினதானமையின்,

'சினமடங்க மாருதியால சுடுவித்தானை'

என்று பெருமானின் அருட்கருணையை வியந்து உணர்ந்து அருளியதாகும் இத்திவ்ய ஸூக்தி சொற்கள்.

இதற்கு முன்பு இடம் பெற்றுள்ள ஆரணய 72—1 வது ச்லோகத்தில் 'தாம் ப்ரேக்ஷ்ய ஸர்வதோ தீப்தாம் சிதாம் த்ருட தனுர்தர;—நான்கு புறமும் நன்கு எரியும் (கபநதன் தகன சிதை) சிதையை வில்லுறுதி உயாவு உள்ள (இலக்குவன்) லக்ஷ்மணன் பார்த்து, (முற்கூறிய 5-வது சுலோகத்தை இராமனை விளிதது) கூறினான் என்பது இதன் பொருள். இதில் 'ஸர்வதோ தீப்தாம்'— நான்கு புறமும் பரந்து எரியும் என்ற சொற்றொடர் பின்னா நிகழ இருக்கும் விரிந்து எரியும் லங்கா தகனத்தை நுட்பமாக புலப்படுத்துவதாகிறது. ஏனெனில் ஜடாயு சிதை, தகனத்துககு இவ்வாறான இயல்பு இருந்த தாக குறிப்பு இல்லாத விடத்து, கபந்த சிதையும், தகனமும், 'ஸர்வதோ தீப்தாம்' என்ற குறிப்பும, மூன றவதாக, 'பெருமானே! தேவரீர் திருவுளத்தில் எதை அருளி செயயப் போகிறீர்? எதை அருளப் போகிறீரோ! என்பதும' பொருள் பொதிந்து அமைந்துள்ளது. தற்கால உலக அரசியலிலும், ஒரு நாட்டு தூதர், தனக்கு இடப்பட்டபணி (Terms of Reference) யை மீறி ஆணைவரம் பில்லாத ப்ரசனைகளை கரு தாது ஈடுபடாது தன் அரசு ஆணைப் படியே அரசின் உளக்கிடக்கையை ஒட்டியே செயல் புரிய வேணடும். அத்தூதர் யாதொரு செயல், பேசசு, நடவடிக்கையாவும், தன் அரசின் நியமநியதிபபடியே அமையவேண்டும் என்ற தத்துவம், கோட்பாடு, ஸ்ரீமத் ராமாயண காலத்தே அரசியல் நாகரீகமாக உள்ளது என்பது அறிந்து இன்புறப்பாலது.



## பூணூல் அணிவதன் தத்துவம்

பூணூலை மார்பிலும் முதுகிலும் வரும்படி இடமிருந்து வலமாக அணியும்போது நமது உடல் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. நமது உடலின் மேன்மையான காரியங்களைச் செய்யும் பகுதி அந்தப் பிரிவுக்கு மேலே போய் விடுகிறது. நமது சிந்தனைக்கும் இயக்கத்துக்கும் முககியமாகப் பயனபடும் முளையுள்ள தலைப்பகுதி நம்மை ஒவ்வொரு கணமும் செயலபடுநதும் நல்ல இரத்தத்னத அளிக்கும் இருதயம் சுவாசப்பை ஆகியவை உள்ள பகுதி, நாம் முக்கியமான காரியங்களைச் செய்ய உதவும் வலது தோள், கை ஆகியவை இந்த மேற்பகுதியில் அமைந்து விடுகின்றன.

இந்தப் பிரிவுக்குக் கீழே உள்ள பகுதி மிருகங்களுக்கும் மனிதனுக்கும் பொதுவான கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டும். பசியைக் காட்டி நம்மை எதையும் செய்யத் தூண்டும் வயிறு, இந்திரிய சுகத்துக்காக ஏற்பட்ட நமது பிறவி உறுப்புக்கள் ஆகியவை இங்கே கீழ்ப் பகுதியில் அமைந்து விடுகின்றன. இப்படி நம் உடலை இரு பாகங்களாகப் பிரித்துக் காட்டுவது தான பூணூல்.

வயிற்றுப பசிக்கும காமத்துக்கும் அடிமையாகாமல் தனது சிந்தனையால் உயர்வு பெறுபவனே, மிருக உணர்ச்சியிலிருந்து விடுபட்டு மனிதப் பிறவியின் மேன்மையை அடைந்தவனாகிறான். பட்டினியையும், காமத்திலிருந்து விடுதலை பெறுவதையும் முக்கியமாக நமது மதம் உணர்த்துகிறது.

இவ்வாறு கீழிருநது மேலே உயரும் நிலையையே பூணூலின் தத்துவம் நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

—சுவாமி நித்திய போதானந்தாவின் 'ஆன்மீக அருள் வாக்கு' என்ற நூலிலிருந்து.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்-கோவை.

# குடிமல்லம் பரசுராமேசுவரர்

சைவ சமயத்தில் முழுமுதற் கடவுளாக வணங்கப்பெறும் சிவபெருமான் கோயில்களில் இலிங்கத்திருவுருவில் பொதுவில் மூலவராகத் தொழப் பட்டு வருகிறான். இலிங்கத் திருவுருவில் எந்த வடிவமும் அமைக்கப்படுவதில்லை. ஆகமங்களில் முகலிங்கம் என நடுவகை இலிங்கத் திருவுருவைப்பற்றிவிதி உள்ளது அதன்படி. இலிங்கத்தில் ஒன்று முதல் ஐந்து முகங்களை அமைக்கலாம். 5 முகங்களைக் கொண்ட இலிங்கத் திருவுருவை மூலவராக தென்னாற்காடு மாவட்டத்தில் திருவக்கரையிலும், 4 முகங்களையுடைய இலிங்கத் திருவுருவை அதே மாவட்டத்தைச் சார்ந்த திருவதிகைக் கோயிலின் திருச்சுற்றிலும் காணப்படுகின்றன. இத்தகைய அரிய அமைப்பு தமிழகத்தில் வேறு எந்தக் கோயிலிலும் இருப்பதாகத் தெரியவில்லை ஆகம விதிகளுக்கு வேறுபட்டு சிவபெருமானின் முழு வடிவங்கொண்ட அரிய இலிங்கத் திருவுரு ஆந்திர மாநிலத்தில் குடிமல்லம் என்ற இடத்தில் உள்ளது.

ஆந்திரமாநிலத்தில் ரேணுகுண்டாவை அடுத்து இந்த சிற்றூர் உள்ளது. புகழ்மிக்கதிருப்பதியினின்றும்இங்குச் செல்ல பேருந்து வசதி உள்ளது. இங்குள்ள கோயில் சிறிய அளவிலானது. கருவறை வட்ட வடிவமாக உள்ளது. இது கஜ பருஷ்ட அமைப்பு அதாவது தூங்கானை அமைப்பு அல்லது ஓங்கார வடிவம் என்று சொல்லப்படும் மூலவராக உள்ள இலிங்கத் திருவுருவை சிவபெருமானாகவும், இதில உள்ள வடிவம் பரசு என்ற படைக் கலத்தை உடைமையால், பரசுராமர் என்ற திருமாலாகவும், இந்த வடிவத்தின் காலடியில் இருப்பது பிரம்மாவாகவும் கருதப்பட்டு, இந்த வடிவம் திருமூர்த்தி என இப்பகுதியில் வணங்கப்பட்டு வருகிறது.

இங்குள்ள இலிங்கத்திருவுருவின் கீழே பொதுவாகக் காணப்படும் ஆவுடையார் என்ற அமைப்பு இல்லை. ஏறத்தாழ 5 அடி உயரமுள்ள இந்த இலிங்கத் திருவுருவில் முன் பகுதியில் இரு கைகளுடன் சிவபெருமான் நின்ற நிலையில் உருவாக்கப்பட்டுள்ளான். இவனது வலக்கை தன் அன்பிற்கு உரிய மானின் பின் இரு கால்களையும் பிடித்துக்கொண்டிருக்கிறது. மான் தலைகீழாக உள்ளது இடக்கையில் குண்டிகை அமைக்கப் பட்டுள்ளது பரசு என்ற படைக்கலம் அவனது தோள் மீது சாத்தப்பட்ட நிலையில் உள்ளது. தலையில் தலைப்பாகை போன்ற அமைப்பு உருவாக்கப்பட்டுள்து காதுகளில் குண்டலங்களும், தோள்களில் வாகு வலயங்களும், கைகளில் கடகங்களும், மார்பில் மாலையும் அமைக்கப்பட்டுள்

திரு டி. இராசமாணிக்கம்,
பொள்ளாச்சி.

ளன. மார்பில் முப்புரிநூல் உருவாக்கப்படவில்லை ஆடை மிகவும் நுண்ணியதாக அமைக்கப்பட்டுள்ளதால், ஆண் குறி, தொடை ஆகியவை நன்றாகத் தெரிகின்றன. இந்த வடிவம் கலைத் திண்மையுடன் எழிலுற அமைந்துள்ளது. கைகளைக்கீழே ஊன்றியபடி உட்கார்ந்துள்ள ஒரு அரக்கனது இரு தோள்களின்மீது இவன் நின்று கொண்டுள்ளான். அரக்கனது தலையில் சடாமகுடமும், கழுத்தில மாலையும் காணப்படுகின்றன. அவனது இரு காதுகளும் நீண்ட அமைப்பினை உடையதாக உருவாக்கப்பட்டுள்ளன, அவன் சினத்த முகத்துடன் காணப்படுகிறான்.

பரசு, மழு இரண்டும் ஒரே படைக்கலத்தைத்தான் குறிக்கிறது. பரசுராமனை "மழுவலங்கை கொண்ட இராமநம்பி" என்று பெரியாழ்வாரும், "வென்றிமா மழுவேந்தி" என மங்கை மன்னனும் அருளியுள்ளதினின்றும் இதை அறியலாம். சிவபெருமான் மழுவை ஏந்தியுள்ளதாக தேவாரம் பாடிய மூவர்கள் பல இடங்களில் தம் பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். சம்பந்தர் "பரசு பாணியர்" என்றும், அப்பர் "பரசுதரபாணியானை" என்றும் அருளியிருக்க, சுந்தரர் 'பரசாருங்கரவா" எனக் கூறியுள்ளார் எனவே பரசும் மழுவும் ஒன்றே என்பது தெளிவாகிறது. மான் சிவபெருமானுக்கு உரிய அடையாளம்; "மான் மருவுங்கையானை" என்பது சுந்தரர் திருவாக்கு, சிவபெருமானது இடக்கையில் மானும், வலக்கையில் மழுவும் அமைப்பது மரபு. மேலும் அவனது கங்காள வடிவத்தில் ஆகம விதிகளின்படி, அவனது பின் வலக்கை தன் அன்பிற்குரிய மானுக்கு ஏதோ அளிப்பது போன்ற தோற்றத்தில் இருக்கவேண்டும். எனவே இங்குள்ள வடிவம் சிவபெருமானேயன்றி பரசுராமர் அன்று. இந்த வடிவத்துடன் பரசு என்ற படைக்கலம் இருப்பதால், இவன் பரசுராமேசுவர் என அழைக்கப்படுகிறான். இவனது காலடியில் உள்ள வடிவம் பிரம்மா என்பதற்கு 4 தலைகளோ அல்லது கைகளில் அக்கமாலை, குண்டிகை போன்ற அடையாளங்கள் ஏதும் இல்லை. உருவம் அரக்கனைப் போன்றுதான் உள்ளது. சிவபெருமானது ஆடவல்லாரை ஆலமர் செல்வன் ஆகிய வடிவங்களின் காலடியில் முயலகனை அரக்கன் இருப்பதைக் கருத்தில் கொண்டால், இதை அரக்கனாகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது.

இந்திய நாட்டில் உள்ள இரண்டு தொன்மையான இலிங்கத்திருவுருவங்களில் இது ஒன்று? மற்றொன்று இலக்னோ அருங்காட்சியகத்தில் உள்ளதாகத் தெரிகிறது. இது 2000 ஆண்டுகளுக்கு மேற்பட்டது என்பது அறிஞர்கள் கருத்து. தொன்மையானது மட்டுமன்றி, கலை அழகு மிக்க இந்த வடிவம் காண வேண்டிய ஒன்றாம்.

(இத்தலத்தின் மூலவரின் உருவச் சிலை 31-ஆம் பக்கத்தில் பிரசுரிக்கப் பட்டுள்ளது)

# ஸ்ரீ கபிலர் அவதாரம்

திரு. என். ராமகிருஷ்ணன்,
சேலம்.

முன்னுரை :

உலகிலுள்ள உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியைப் பற்றிய விஞ்ஞான ஆய்வுகள் நடத்துவதற்கு முன்பே உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியை கடவுள் தமது அவதாரங்கள் மூலமாக எடுத்துக் கூறியுள்ளார். மனிதனுக்கு மரணத்தைப் பற்றிய பயமும், கவலையும் சிந்தனை ஏற்படாமலேயே இருந்திருந்தால், உலகத்திலுள்ள எந்த ஒரு மதமும் நீடித்து, நிலைத்து இன்றுள்ள நிலையில் உயர்ந்திருக்க முடியாது. மதம் என்ற சொல்லே மனத்திமிரைக்குறிப்பதாகும். மனிதன் மரணத்திற்கு மட்டுமே அஞ்சுகிறான். எனவே மனிதனுக்கு அறிவின் அகம்பாவமும் மனத்திமிரும் அடங்கி மரணத்தைப் பற்றிய பயமேற்படும் போதுதான், அவனுக்கு கடவுளைப் பற்றிய சிந்தனையே வலுப்பெறுகிறது. உலகத்தைப் படைக்கின்ற கடவுள் தான் உலகத்தைக் காப்பாற்றுகிறார். காப்பாற்றுகிற கடவுள் தான் உலகத்தை அழிக்கவும் செய்கிறார் என்ற எண்ணத்திலிருந்து விலகி, படைக்கும் கடவுளையும் அழிக்கும் கடவுளையும் விட்டுவிட்டு உலகத்தை காக்கும் கடவுளாகிய மஹா விஷ்ணுவைப் பற்றி சிந்தித்து மஹாவிஷ்ணுவின் இருபத்துக்கும் மேற்பட்ட அவதாரங்களையும், அந்தந்த அவதாரங்களின் காரண காரியங்களையும், உபதேசங்களையும் தெளிவாக விளக்குவது ஸ்ரீமத் பாகவதமாகும். கடவுளே மனிதனாக அவதாரம் செய்து உலக மக்களுக்கு உபதேசித்த உபதேசங்கள் காலத்தால் அழிக்க முடியாத அமரத் தன்மை வாய்ந்தவையாகும்.

கபில அவதாரத்தில் பகவான் உபதேசித்த சாங்கிய யோக சிந்தனைத் தத்துவங்களைப் போன்ற ஆன்மீக தத்துவங்களை மனித குலம் மேன்மை அடையவும், தெய்வ பக்தி தழைக்கவும் ஒவ்வொருவரும் அறிய வேண்டியது இந்துக்களாகிய நம் கடமையாகும்.

கர்த்தமரும் பகவானும்:

பிரம்மதேவன் கட்டளைப்படி கர்த்தமர் என்ற முனிவர் சரஸ்வதி நதிக்கரையில் பல்லாண்டுகள் தவம் செய்தார். அப்போது ஸ்ரீமந் நாராயணன் அவர் முன்பு தோன்றினார். கர்த்தமர் பகவானை வணங்கித் துதித்தார். அப்போது பகவான் அவரை நோக்கி, "எந்த பயனைக் கருதி என்னை நோக்கித் தவமிருந்தாயோ அதை நான் உமக்கு அளிக்கிறேன். என்னிடம் திடமான மனமுடையவர்கள் செய்யும் பக்தி ஒரு போதும் பயனற்றதாகாது. பிரம்மதேவரின் புத்திரரும் ராஜரிஷியுமான சக்கரவர்த்தி மனுவானவர் தமது புதல்வியான தேவஹூதியை உனக்குத் திருமணம் செய்து கொடுப்பார்கள். அந்த பத்தினி மூலம் உமக்கு ஒன்பது பெண்கள் பிறப்பார்கள். இறுதியில் சகல கர்ம பலன்களையும் என்னிடம் ஸமர்ப்பிக்கும் உனக்கு, நான் உமது பத்தினியான தேவஹூதியினிடத்தில் உமது வீரியத்துடன் கூட எனது அம்சமாக அவதரித்து சாங்கிய சாஸ்திரத்தைச் செய்யப்போகிறேன்" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

கர்த்தமரும் தேவஹூதியும் :

பகவான் திருவாய் மலர்ந்தருளியபடி சக்கரவர்த்தி சுவயம்புவ மனுவும் அவரது துணைவியான சதரூபையும் கர்த்தமரை வணங்கி தமது புதல்வியான தேவஹூதியை ஏற்று இல்லற வாழ்க்கை நடத்த வேண்டினார். கர்த்தமர் அவரை நோக்கி, "சக்கரவர்த்தி! உமது விருப்பத்திற்கேற்ப உமது மகளை நான் ஏற்கிறேன். இல்லற வாழ்வையும் நடத்துகிறேன்! ஆனால் இவள் கருவுற்றுப் பிள்ளை பெறும் வரையில் தான் நான் இவளுடன் இருப்பேன். அதற்குப் பிறகு நான் மீண்டும் துறவறத்தை மேற்கொள்வேன். பகவானின் கட்டளை அதுவேயாகும்" என்றார். பிறகு சுயாவம்புவமனு தன் மனைவி மகள் ஆகியோரின் கருத்தையறிந்து தன் புதல்வி தேவஹூதியை கர்த்தமருக்கு முறைப்படி திருமணம் செய்து கொடுத்தார்.

கபிலர் அவதரித்தார்

கர்த்தமரும் தேவஹூதியும் இல்லற வாழ்வின் தர்மப்படி வாழ்க்கை நடத்தினார்கள். பகவான் கர்த்தமரின் வீரியத்தில் புகுந்து, கட்டையில் அக்கினித் தத்துவம் இருப்பது போன்று பிரவேசித்து, தேவஹூதியின் கருவில் பகவான் உருவானார். தேவஹூதி ஆண் குழந்தை ஒன்றைப் பெற்றாள். தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். அப்போது பிரம்மதேவர் மரீசி முதலிய முனிவர்களுடன் அங்கு வந்து சேர்ந்தார். பகவானே அவதரித்து இருக்கும் அந்த ஸரஸ்வதி ஆற்றங்கரை ஆஸ்ரமம் புனிதமடைந்தது. பிரம்மதேவர், கர்த்தமர் மற்றும் தேவஹூதியை நோக்கி "பகவானே உங்களுக்கு கபிலராக அவதரித்திருக்கிறார். அவர் உலகத்திலே சாங்கிய தத்துவத்தை உபதேசித்துப் பெயரும், புகழும், பெருமையும் பெற்றுத் திகழ்வார்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

பகவானே தனக்கு மகனாய்ப் பிறந்திருப்பதை அறிந்து கொண்ட கர்த்தமர் தனிமையில் கபிலரிடம் சென்று

வணங்கி, "பகவானே நான் செய்த பூர்வ ஜென்ம புண்ணியத்தினால் நீங்கள் திருவாய் மலர்நதருளியபடி சாங்கிய ஸாத்திரத்தை இயற்றவும பக்தர்கட்கு பெருமையளிக்கவும் இங்கு அவதரித்துள்ளீர்கள். ஐஸ்வர்யம், வைராக்கியம், ஞானம், வீரியம் நிரம்பப்பெற்றவரும், சர்வக்ஞரும், பரமேஸ்வரனும், காலருபியுமான கபிலராகிய உமமை சரணமடைகிறேன்" என்றார். அப்போது கபிலபகவான்,'சரீரத்திலிருந்த ஆத்ம தரிசனம் அடைய விரும்புவோருக்கு ஞானத்தை அளிக்கவே இப்பிறவி எடுத்தேன். கர்மத்தால் வெல்ல முடியாத மிருத்யுவை வென்று மோட்சமடைய என்னைப் போற்றுக! நீரும் மோட்சத்தை அடைவீர்! ஆதம வித்தையை நான் என் தாய் தேவஹூதிக்கு உபதேசிக்க போகிறேன்" என்றார். இதைக் கேட்ட கர்தம முனிவர் கபிலரை வணங்கி வலம் வந்து பக்தி யோகத்தில் ஈடுபட்டு மோட்சத்தையடைந்தார்.

சாதுக்கள யார்?

பகவானான கபிலர் பிநதுசரஸில் தமது தாயுடன் வாழ்ந்து வரும் காலத்தில் ஒரு நாள் தேவஹூதி தன் மகனை நோக்கி, "ஹே சுதன்! பொறிகளின் போக்கிலேயே சென்ற நான் அறியாமையில் மூழ்கி மிகவும் சோர்ந்து விட்டேன். எனனைக் கரையேறற உம்மால்தான் முடியும். ஞானத்தை போதிக்கவும, மோகத்தைப் போக்கவும் உம்மைத் தவிர வேறு யாராலும் முடியாது. பிரக்ருதி, காலம், புருஷன் ஆகியவை பற்றி நீரே எனக்கு உபதேசிக்கவேண்டும்" என்று வேண்டினாள்.

அதைககேட்டு மகிழ்ந்த கபிலர் சொல்கிறார்: "குற்றமற்றவளே! முனிவர்களுக்கு ஏந்த யோகத்தை நான் முன்பு உபதேசித்தேனோ, அதை உனக்கும் இப்போது உபதேசிக்கிறேன. மனம் என்பதுதான் ஜீவாத்மாவின பந்தத்திற்கும் மோட்சத்துக்கும் காரணம். அதே மனம்தான் பக்திக்கும் முக்திக்கும் காரணம். எப்போது மனமானது நான் எனது என்ற கர்ம லோபாதிகள் இல்லாது ஆகுமோ அப்போது அது சுத்தமாகிறது. அபபோது மனம் தூய்மை அடைநது இன்பம், துன்பம் என்ற உணர்ச்சிகள் நீங்கி சமநிலையை அடைந்து எங்கும் எதிலும் பகவானையே காணும். மேலும் நல்ல சாதுக்களோடு உறவு ஏற்படுமாயின் அதுவே மோட்சத்துக்கு உதவுகிறது. சாதுக்களாகிய சான்றோர்கள் யார்? சாதுக்கள் என்பவர்கள் மிகுந்த பொறுமையுடன் கொண்ட சகிப்புத் தன்மை உடையவர்கள். கருணை நிறைந்தவர்கள். பிரதிபலன் கருதாது எல்லா ஜீவன்களையும்சமமாக பாவிககும்மனப்பக்குவம் உடையவர்கள். பகவானாகிய என்னிடததில்தியானபக்தியும் சாந்தமும்நல்லொழுக்கமும்உடையவர்கள். ஹே ஸாத்வி! அவர்களோடு உனக்கு ஏற்படும பழக்கம் பிரார்த்திக்கத் தக்கது. அந்த சாதுக்களின் சத்சங்கத்தினால் எனது சக்தியை தெரிவிக்க கூடியதும், ஹிருதயத்திற்கு இதம் அளிப்பதுமான நல்ல கதைகள் கிடைக்கின்றன. அவற்றைக் கேட்பதால் மோட்ச மார்க்கத்திற்குரிய வைராக்கியமும் பக்தியும தானே



ஸ்ரீ சென்னகேசவர் கோயில்-பேலூர்.

உண்டாகும். அதற்குப்பிறகு தீயோர் சகவாசமும், மற்றும் பாச மும் விலகி, ஞானலோகமும், கர்ம லோகமும் கைகூடி ஜீவனானவன் மோட்சத்திற்கு முயற்சிக்கத் துவங்கு வான். முடிவில் பக்தியினாலும் ஞான யோகத்தினாலும் பரமாத்மா வான என்னை இந்த தேகத்திலேயே அடைந்து விடுகிறான்" என்றார்

இதைக்கேட்ட தேவஹூதி, பக வானை நோக்கி "பகவானே! பெண் பாலாகிய நான் உம்மிடத்தில் எத்த கைய பக்தியை கடைப்பிடிகக வேண் டும். எந்த யோகத்தினால் தத்துவ ஞானம் உண்டாகும்? அவற்றை எனக்கு உபதேசிக்க வேண்டும்" என் றாள். அதற்குக கபில பகவான் தன் தாய்க்கு பொங்கிய மதத்தத்துவங் களையும், பக்தியோகத்தையும், அஷ் டாங்க யோகத்தையும் உபதேசித் தார்.

"எவ்விதமான விகாரமுமில்லாத மனதும், ஞானேந்திரியங்களும், கர் மேந்திரியங்களும் சத்வ குணமுடைய பகவானிடததில் லயித்து விருத்திய டைவதையே பகதி என்று சொல்ல வேண்டும். அந்த பக்தியே முக்தியை விட மேலானது. உண்ணும் உணவை ஜடராக்கினி நாசம் செய்வதைப் போல இத்தகைய பக்தியானது பூர் வீக கர்மவாசனைகள் அனைத்தை யும் போககி விடுகிறது. என்னையே பூஜிக்கும் ஏகாந்த பக்தர்களுக்கு நானே பிரியமான ஆத்மாமாகவும், புத்திரனாகவும். நண்பனாகவும், குரு வாகவும, இஷ்டதெய் வமாகவும் இருக்கிறேன். மனைவி மக்கள, வீடு, வாசல், பணம், தனம், பெற்றோர், உறவினர் ஆகிய அனைததையும துறந்து, யார் என் னிடத்தில் மாறாத பகதியைச் செலுத்துகிறார்களோ, அவாகளை நானே சம்சார சாஹரத்திலிருநது கரையேற்றி மீண்டும் மறு பிறவி ஏற்படாத முகதியை நான அவர் களுககு வழஙகுகிறேன். தீவிரமான பகதி யோகததினால என்னிடத்தி லேயே அர்ப்பணம் செய்யப்பெற்ற மனது, என்னிடததிலேயே நிலைப் பதுதான் இந்த உலகததில ஜீவர் களின முக்தியாகும்" என்றார் கபி லர்.

சாங்கிய யோக விளக்கம.

கபிலர், மேலும் சாங்கிய சாஸ்தி ரத்தையொட்டி ஜீவனானது பிர கிருதி ஆகியவற்றில் பகுத்தறிவு பெறுவதற்காக சகல தத்துவமுடைய ஜன்மமானது பயிற்சி பெறுவது குறித்து வர்ணிக்கிறார். புருஷனுக்கு முக்தியேற்படுவதற்காக ஆத்ம சாக்ஷாத்காரமான எந்த ஞானத்தை சொல்லுகிறார்களோ, அஹங் காரத்தை நிவர்த்தி செய்யும அந்த ஞானததைப பறறி பகவான் சொல்ல ஆரம்பித்தார்.

"இந்த பிரபஞ்சமானது எவனுடன் ஊடுருவிக் கலநது பிரகாசிக்கிறதோ அத்தகைய ஸ்வயத் ஜோதியான ஆத்மாவே புருஷன் எனப்படுகிறார். உண்மையில் விபு வான இந்த புருஷன் லீலை காரண மாக எண்ணி தனக்குச் சமானமான ரூபமுள்ள பிரஜைகளால சிருஷ்டிக் கின்ற பிரகிருதியை கண்டு மோட்ச மடைந்தான். இவ்விதம் புருஷன் தனனைவிட மாறுபட்ட பிரக்ருதி யினால் ஏற்பட்ட தாரம்மியவத யாஸத்தினால் பிரகிருதியுடைய குணங்களால் கர்மங்கள் செய்யப்படு பனவாக இருக்கத் தன்னிடத்தில் கர்மகர்த்திருவத்தை எண்ணுகிறான். அந்த கர்த்ருத்வ ஞானமேதான், சாக்ஷிமித்ரனாக இருப்பது பற்றி அகர்த்தாகவே இருக்கின்ற இந்த புரு ஷனுக்கு கர்ம பந்தத்தைத் தருவதாக வும், ஈஸ்வரனாகவே இருக்கும் இவ னுககு கர்ம பந்தத்தினால் செய்யப் பெற்ற போக பாரதந்திரிய காரண மாகவும் ஸுகஸ்வரூபனாக இருக்கும் இவனுக்கு ஸம்சாரம் என்னும் ஜனன மரணப் பிரவாஹ காரணமாகவும் ஆகிறது. ஆகவே அந்தப் பிரகிருதி விவேக ஞானமின்மையாற் செய்யப் பட்டே இவை யாவும் ஏற்படுகிறது" என்றார்.

இவ்விதம் ஸம்ஸாரியான புருஷ னையும் அதற்குக் காரணமான பிர கிருதியையும் அறிந்துகொண்ட தேவ



ஸ்ரீ ஏகாம்பரேஸ்வரர் திருகோயில்-காஞ்சிபுரம்.

ஹூதி கபிலரை நோக்கி, "ஹே, புருஷோத்தமா! இந்த பிரபஞ்சத்தின் காரணமான பிரக்ருதியின் ஸ்வரூபத்தை உபதேசிப்பீராக!" என்றாள்.

ஸ்ரீ பகவான் சொல்கிறார்: "ஆதியில் குணத்ரய ஸாம்யாவஸ்தையிலிருப்பது பற்றி, இயற்கையில் எத்தகைய விசேஷம் அற்றதும தன்னுள் மஹதாதிகாரி யோத்பாதனத்துக்குரிய சக்தியை உடையதும், த்ரிகுணாத்மகமும் காரிய காரணமாக ஸ்வரூபமாகவுள்ளதும் நித்யமுமான யாதொரு பிரதானமுண்டோ அதையே பிரகிருதி என்கிறார்கள். பிரத்வீ, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற இந்த ஐந்து மகா பூதங்களும, கந்தத் தன்மாத்திரை, ரஸ தன்மாத்திரை, தேஸ தன்மாத்திரை ஸ்பரிச தன்மாத்திரை, சப்ததன்மாத்திரை ஆக இந்த ஐந்துதன்மாத்திரைகளும், ஸ்ரோத்திரம், த்வக், சக்ஷுஸ், ரஸனை, கிராணம், வாக், பாணி, பாதம், மேட்ரம் ஆகிய இவை முறையே ஒன்பது இந்திரியங்களாகவும மலத்து பாரத்திலுள்ள பாயுவானது பத்தாவதாகவும சொல்லபபடுகிறது. அந்தகரணமானது மனஸ, புத்தி, அஹங்காரம், சித்தம் என்று நான்காகும் இவையே ஸகுண பிரம்மத்தின் சரீரமாக தத்துவமறிந்தவர்களால் 24 தத்துவங்களாகக கணக்கிடபபட்டுஇருக்கிறது. காலம என்பது இருபத்தைந்தாவது தத்துவமாகும. தேஹத்தில் தான், என்னுடையது என்ற மோஹமடைந்த கர்த்தாவான ஜீவனுக்கு எதிலிருந்து பயமுண்டாகிறதோ அதுவே காலமாக சொல்லப்படுகிறது. எவர் தனது மாயையினால் எல்லா ஜீவன்களின் உள்ளேயும் ஜீவன் என்ற புருஷ ரூபத்துடனும் வெளியே கால ரூபத்துடன் அவற்றின் விகாரமற்றவராகவே தொடர்ந்து பிரகாசிக்கிறாரோ அவரே பகவானாகிறார்?" இவ்வாறு சொலலி விட்டு தத்துவங்களின் உற்பத்தி விவரத்தையும ஸ்வரூபங்களையும் சொல்லத் துவங்குகிறார். "பிராணன், இந்திரியம், மனம், புத்தி இவைகள் ப்ரசுப்தனான புருஷனிடத்தில் ஒடுங்கி எவனில்லாமல் தனது சக்தியினால்மட்டும் இந்த சரீரத்தை எழும்படி செய்ய முடிவதில்லையோ அந்த பரமாத்மாவை யோகத்தில் ப்ரவிருத்தித்த புத்தியினாலும், விரக்தியினாலும், பக்தியினாலும், ஞானத்தினாலும் பிரித்துத் தன்னுள் சிந்திக்க வேண்டும்" எனகிறார் கபில பகவான்.



வரைந்தவர்: இருமி பப்பி - வில்லிவாக்கம், சென்னை.

**பிறவிகள் ஏன ஏற்படுகின்றன?**

ஸ்ரீபகவான் சொலகிறார்: "சமுத்திர ஜலத்தின்நடுவில் சூரியன தோன்றினாலும் அந்த ஜலத்தினால் அணைவது இல்லை. அதுபோலவே புருஷன பிரகிருதியின் குணங்களை அடைவதில்லை அவன அகங்காரத்தினால் விமூடமான மனமுள்ளவனாய், நான் காத்தாவாக இருக்கிறேன் என்று எண்ணு

(29-ம் பக்கம் பார்க்க)

# உய்யக்கொண்டாரும் மணக்கால் நம்பிகளும்

வைணவ ஆச்சார்யருள் தலை சிறநதவர் நாதமுனிகள் என்பதை முன்பே அறிவோம். நாதமுனிகளின் சீடர்களுள் தலைசிறந்தவர் உய்யக்கொண்டாா என்பவர். உய்யக்கொண்டாரின் சீடர்களுள தலை சிறந்தவராக விளங்கியவர் மணக்கால் நம்பிகள். எனவே, இவவிரு ஆச்சார்யகளைப்பற்றிய இணைந்த வாழ்க்கையை ஒரு சிறிது அறிவோம்.

திருவெள்ளறை எனப்படும் திருத்தலத்தில் உய்யக்கொணடாா திரு அவதாரம் செய்தார். ப்ரபவ ஆண்டு சித்திரைத்திஙகள் வெள்ளிக் கிழமை பௌர்ணமி கார்த்திகை யன்று திருஅவதாரம் செய்ததாக இவரைப்பற்றி அறிய முடிகிறது. இவருடைய பெற்றோர்பற்றித் தெளிவாக அறிய முடியவில்லை.

நாதமுனிகளின திருவடிகளையே தஞ்சம் என்றடைந்து உய்யக்கொண்டார் பணிவிடை செய்து வநதார். நாதமுனிகளிடம் சகல ஞானஙகளையும் பெற்றுப் பேரறிஞராய்த் திகழ்ந்தார். நாலாயிரத் திவ்யப்பிரபநதங்களைப் பண்ணுடன் பாடிப் பொருள் விளககங்கூறிப் பக்தர்களின் உள்ளததைப் பரவசமடையச் செய்தார். வைணவ நெறியைக் கருத்தாழத்தோடு பொருத்தமாக எடுத்துக்கூறிக் கேட்டோரைத் தன் வசப்படுத்தி வந்தார்.

உய்யக்கொண்டாருக்குப் புண்டரீகாட்சர், பத்மாட்சர், ராஜீவாட்சர், அரவிந்தாட்சர் என்னும் திருநாமங்களும் உண்டு. நாதமுனிகளைத் தம் குருவாக ஏற்றுப் போற்றி வந்தார். நம்மாழ்வாரை வணங்குவதிலும், நம்மாழ்வாரின அருளிச் செயல்களை ஓதுவதிலும மிகுந்த நாட்டமுடையவராய் இருந்தார்.

மணக்கால்நம்பி, திருவல்லிக்கேணி பாண்பெருமாள் அரையர், சேட்டலூர் செண்டலங்காரதாசர், புண்டரீகதாசர், கோமடம் திருவிண்ணகரப்பன், உலக பெருமாள நங்கை ஆகியோர் உய்யக்கொணடாரின சீடர்களாகத் திகழ்ந்து வந்தனர்.

உய்யக்கொண்டாரின் திருவடிகளைப்பற்றி நின்று பன்னிரண்டு ஆண்டுக் காலம் மணக்கால் நம்பிகள் பணிவிடை செய்து வந்தார். உய்யக்கொண்டாரின் துணிவியாராகிய ஆண்டாள் என்பவர் திருநாட்டுக் கெழுந்தருளிய பின் (இறந்தபின்), மணக்கால் நம்பிகளே உய்யக்கொண்டாரின் வீட்டு வேலைகள் அனைத்தையும் தமதாக்கிக் கொண்டு செய்து

திரு. மாருதிதாஸன்,
காஞ்சிபுரம்.

வந்தார். குருவுக்குப் பணிவிடை செய்ததுடன், குருவின் குடும்ப வேலைகளையும் செய்து வந்த மணக்கால் நம்பிகளின குரு பக்தியை எவ்வாறு வியந்து கூறுவது?

உய்யக்கொண்டாருக்குப் பெண் பிள்ளைகள் இருவர். ஒரு நாள் இவ்விருவரையும் அழைத்துக் கொண்டு நீர் நிலைக்குச் சென்ற மணக்கால் நம்பிகள், இவ்விருவரையும் நீராடச் செய்து வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வரலானார்.

வரும்வழியில் வாய்க்கால் ஒன்று இருந்தது. சேறும் சகதியும் நிறைந்த



ஸ்ரீ வீரராகவன்-கனகவல்லித் தாயார்-திருவள்ளூர்.



ஸ்ரீ இராமன் திருக்கோயில்-காளேஸ்வரம். (ஆ.பி)

அந்த வாய்க்காலில் நடக்க முடியாமல் அப்பெண்பிள்ளைகள் இருவரும் தத்தளித்தனர். இதனைக் கண்ட மணக்கால் நம்பிகள் அச்சேற்றில் குப்புறப் படுத்துக்கொண்டார். தம் முதுகின் வழியாக அவ்வாய்க்காலைக் கடக்குமாறு கூறினார். அப்பெண்பிள்ளைகள் இருவரும் மணக்கால் நம்பியின் முதுகின் மேலே ஏறி நடந்து அவ்வாய்க்காலைக் கடந்தனர். இச்செய்தியினைக் கேட்டு உய்யக்கொண்டார் பெரிதும் மகிழ்ந்தார். தம் சீடரின் அளவு கடந்த குருபக்தியினைப் பாராட்டி அவரை உளமார வாழ்த்தினார்.

தம் சீடராகிய மணக்கால் நம்பியின் ஒப்பற்ற சேவையால் தம் குடும்பத்தை நடத்தி வந்த உய்யக்கொண்டாருக்கு வயது முதிர்ந்துகொண்டே வந்தது. முதுமையின் காரணமாகத் தமக்கு இறுதிக் காலம் நெருங்குவதை உய்யக்கொண்டார் உணர்ந்தார். எனவே, தம் அன்புக்கும் நம்பிக்கைக்கும் உரிய சீடராகிய மணக்கால் நம்பியை அருகே வரவழைத்துத் தம் எண்ணங்களை யெல்லாம் அவரிடம் வெளிப்படுத்தினார்.

"வாரீர் எம் அன்புக்குரிய மணக்கால் நம்பியே! இங்குள்ள உம் போன்ற என்னுடைய சீடர்களின் துணை கொண்டு வைணவ நெறியை வளர்த்து வருவீராக! நம் தலைவராகிய நாதமுனிகள் தம் இறுதிக் காலத்தில் என்னிடத்தில் சில செய்திகளைக் கூறிச் சென்றார்கள். அதை நிறைவேற்றும் பாக்கியம் எனக்கு இல்லாமல் போய்விட்டது. அவர் கட்டளையை நீர்தான் நிறைவேற்ற வேண்டும். நம் நாதமுனிகளுக்குத் திருப்பேரனார் ஒருவர் அவதரிப்பார். அவருக்கு யமுனைத்துறைவர் என்னும் திருநாமத்தைச் சூட்டவேண்டும் என்றும், சகல வைணவ நெறிகளையும் போதிக்க வேண்டும் என்றும், த்வயம் திருமந்திரம் சரமஸ்லோகம் முதலியவற்றின் நுண்பொருள்களை விளக்க வேண்டும் என்றும் எனக்குக் கட்டளையிட்டார். அவற்றை நீரே நிறைவேற்ற வேண்டும்! அப்பாக்கியம் உமக்கே கிட்டுவதாக!"

மணக்கால் நம்பிகளிடம் இவ்வாறு தன் நியமனத்தைச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே உய்யக்கொண்டாருக்கு உடல் தளர்ந்தது. நா வறண்டது. தன் குருநாதராகிய நாதமுனிகளைச் சிந்தித்தவாறே உய்யக்கொண்டாரின் ஆவி பிரிந்தது.

தன் ஆச்சார்யரான உய்யக்கொண்டாரின் பிரிவினைத் தாளாது மணக்கால் நம்பிகள் பெரிதும் வருந்தினார். இறுதிச்சடங்குகளையெல்லாம் குறைவற நிறைவேற்றினார். தன் ஆச்சார்யரின் கட்டளையை நிறைவேற்றுவதற்கான காலத்தை எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தார். சொட்டைக் குலத்தினரான ஈஸ்வர முனிகளின் வயிற்றிடமாக நாதமுனிகளுக்குத் திருப்பேரனார் திருஅவதாரம் செய்யும் காலத்தை நோக்கிக் காத்திருந்தார் மணக்கால் நம்பிகள்!

—வளர்க குருபக்தி!






# வராக அவதாரம்

இரணியகசிபு என்பவனின் உடன்பிறந்தவன் இரணியாட்சன் என்னும் கொடிய அசுரன். இவன் பூமியைச் கவர்ந்து கொண்டு கடலில் மூழ்கிச் சென்றுவிட்டான். இதனைக் கண்ட தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால திருமால் நீருக்கும் சேறறுக்கும அஞ்சாத பெரிய வராக அவதாரமாகத் தோன்றிக் கடலினுட்புகுந்து அவ்வசுரனைக் கண்டுபிடித்து அவனுடன் பொருது அவனைக் கொன்றார். அதன் பின்னர் பாதாளலோகத்தைச் சார்ந்திருந்த பூமியைச் கோட்டினால் குத்தி அதனை எடுத் வந்து அதன் இடத்தில் நிறுவினார் என்பது புராண வரலாறு. இன்னொரு வரலாறும் உண்டு. இப்பொழுது நடைபெற்றுக் கொண்டிருப்பது சவேத வராக கல்பம். இதற்கு முந்தியது பாத்ம கல்பம். அக்காலத்தில் எழுந்த பிரளயத்தின் இறுதியில் பரம்பொருளாகிய திருமால் ஏகார்ணவ

பேராசிரியர். டாக்டர். ந. சுப்புரெட்டியார்,
சென்னை.

மான பிரளய நீரில் முழுகியிருந்த பூமியை மேலே எடுகக நினைத்து வராகவதாரத்தைச் செய்தருளிக் கோட்டு நுனியில் பூமியை எடுத்து வந்தனர் என்ற வரலாறும் அறியத்தக்கது.

அவதார ரகஸ்யத்தை நன்கு அறிந்த ஞானச்செல்வர்கள் ஆழ்வார் பெருமக்கள். வராக அவதாரத்தில் ஈடுபட்ட பொய்கையாழ்வார்,

பொருகோட்டு ஓா ஏனமாய்ப்புக்கு
இடந்தாய்க்கு அனறு உன
ஒரு கோட்டின மேல்கிடந்தது
அன்றே ........ ........ ..
............. ........... .....
மாவடிவின் நீ அளந்த மண்'
(முதல். திரு. 9)

என்று ஈடுபட்டுப் பேசுவர். "நீ அன்று (விண்ணாட்டவரும் மண்ணாட்டவரும் நடுங்கும்படியாகத் திரிவிக்கிரமனாக வளர்ந்து) நீ அளநது திருவடிக்கீழ் இட்டுக்கொணட நிலத்தைக குத்தியெடுத்துக் கொண்டு திரிகின்ற கோரப்பற்களையுடைய வராக மூர்த்தியாய் பிரளய வெள்ளத்தில் மூழ்கிஅண்டபித்தியில்நின்றும இந்தப் பூமியைக் குத்தி எடுத்துக் கொணடு வந்த அக்காலத்தில் நினனுடைய ஒரு கோரப்பல்லின் நுனியில அடங்கிக்கிடந்த தல்லவோ?" என்கின்றார். இதில் கண்களுக்கெட்டாத இரண்டு பெரிய அவதாரங்களாகிய திரிவிக்கிரம, வராக அவதார மகிமைகளில் ஈடுபட்டுப் பேசுகின்றார் ஆழ்வார்.

நமமாழ்வார்.

நமமாழ்வார் இநத அவதாரத்தில் மிகவும ஈடுபட்டு,

'ஏனமாய் நிலம் கீண்ட
என அபபனே
—(திருவாய்-5-7:6)

என்று கூறி மகிழ்கின்றார். இதே பாசுரத்தில் 'வானமாமலையே' எனறும் நான்காம் அடியில் விளிக்

இன்றார். எம்பெருமானை 'வான மாமலை' என்பது 'சிரிவரமங்கலம்' என்ற ஒரு திவய தேசத்தின் திருநாம மாக வழங்கி வந்தாலும் இதனை எம பெருமானின திருநாமமே என்பது தெளிவாகின்றது. ஆகாயத்தளவும் சென்று கிட்டும்படி ஓங்கின மலை போல இரா நின்ற எம்பெருமானை மலையாகவே கூறுதல் மிகவும் பொருத்தமன்றோ? இந்த அவதாரத் தில் இந்த ஆழ்வார் மிகவும் ஈடு பட்டுப் பேசும் இன்னொரு பாசுரம்.

சூழல்கள் சிந்திக்கில் மாயன்
கழல் அனறி, சூழ்வரோ
ஆழப் பெரும்புனல் தன்னுள்
அழுந்திய ஞாலத்தை
தாழப்படாமல் தன் பாலொரு
கோட்டிடைத் தான் கொண்ட
கேழல் திருவுரு ஆயிற்றுக்
கேட்டும் உணர்ந்துமே:

—(திருவாய் 7;5:5)

[சூழல்-உபாயம்; மாயன் கழல்-இறைவன் திருவடி; சூழ்தல்-ஆச்ர யித்தல்; பெரும்புனல்-பிரளய வெள் ளம்: ஞாலம்-பூமி; கோடு-கொம்பு; கேழல்-வராகம்]

"அழிந்த உலகை உண்டாக்கின தோடன்றி அந்தயுலகத்தைப் பிரளய வெள்ளம் கொள்ளாமல் காலத்நாம தத்தில் உருமாய்ந்து போகாதபடி மகா வராகமாய்த் தோன்றிக் காத்த அந்தப் பெருங்குணத்தை அநுசந்தித் தால் அவன் திருவடிகளே தஞ்சம் என்று இருக்க வேண்டாவோ" என் கின்றார்.

இந்த ஆழ்வார தாய்ப்பாசுரம் ஒன்றில் நாயகி நிலையில் இருந்து கொண்டு இந்த அவதாரத்தை அநு சந்திப்பது பக்தி உணர்வைத் தட்டி எழுப்பவல்லதாக அமைகின்றது.

'நின்திரு எயிற்றால்
இடந்து நீ கொண்ட
நிலமகள் கேள்வனே' என்னும்.

—(திருவாய்-7-2;9)

இங்கு வராகாவதாரத்தைக் கூறி யது ஒரு சிறப்பான கருத்தை உணர்த்துவதற்காக. "நீ பூமிப் பிராட்டி பக்கல் முகம் பெறவேண்டு மானால் அவள் சாதியான (பெண்) எங்களை நோக்கியே யாகவேணும் காண்!" என்பது கருத்து. இவ் விடத்தில் ஊடல் மிகுதியினால் ஆண டாள் பேசிய பாசுரம் அநுசந்திக்கத் தக்கது.

பாசிதூர்த் துக்கிடந்தா
பார்மகட்கு பண்டொரு நாள்
மாசுடம்பில் நீர்வார
மானமிலாப் பன்றியாம்
தேசுடைய தேவர்
திருவரங்கச் செல்வனார்
பேசியிருப் பனகள்
பேர்க்கவும் பேராவே.

—(நாச். திரு 11:8)

[பார்மகள்-பூமிப்பிராட்டி; மாசு-அழுக்கு; நீர்வாரா-நீர் ஒழுகா நிற் கும்; மானம்-கீழான; பேர்க்கவும்-பேர்க்கப் பார்த்தாலும்]
என்பது பாசுரம்.

பூமிப்பிராட்டியானவள் வெகு காலம் நீருக்குள்ளே மூழ்கிக் கிடந்த மையால் பாசி படர்ந்துகிடந்தமைப் பற்றிப் "பாசி தூர்த்துக் கிடந்த" என்ற அடைமொழி தரப்பெற்றது. 'மாசுடம்பில் நீர் வாரா மானமிலாப் பன்றி' ஒரு பூமிப்பிராட்டி பக்கல் அமர்ந்த ஆசையினால் ஓர் உடலை



மஹாபலிபுரத்துச் சிற்பம்.



குகைக் கோயில்-நாமக்கல்.

மேற்கொண்டவன் அழுக்குடம்பின ரான நாம் எல்லோருங்கூட அரு வருக்கும்படியான மிகவும் கீழ்ப்பட்ட பன்றிவடிவத்தையா மேற்கொள்ள வேண்டும்? ' உடம்பு அழுக்கேறிற்று' என்று நாணப்படவும் அறியாத பிறப்பையன்றோ ஏறிட்டுக் கொண் டது? நீர் வாருதல்-நீர்பெருகுதல். ' மானமிலா ' என்றவிடத்து வியாக் கியானம் : " மாயா மிருகத்தைக் கண்டு அல்லாத மிருகங்கள் மோந்து பார்த்து வெருவியோடினவிறே; அப் படியன்றிக்கே ஸஜா தீ யங்கள் மோந்து பார்த்தாலும் ' நம் இனம் ' என்று மருவும்படியாய்த்து, ஈசுவரா பிமானம் வாஸனையோடே போன படி". இது சிந்தித்து அநுபவிக்கத் தக்கது.

' பன்றியாந் தேசுடைய தேவர் ' ; நமக்கு இருப்பதுபோல கர்மமடியாக நேர்ந்த பிறப்பு அன்று இது. தன் இச்சையாலே ஏறிட்டுக் கொண்ட பிறப்பாகையாலே தேசு பொலிய நிற்கும் என்கின்றது. " நிலை வரம் பில பலபிறப்பாய் ஒளி வரு முழு நிலம் " (திருவாய்) என்ற சடகோப ரின் திருவாக்கையும் காண்க. ஆண் டாள் தன்னுடைய ஊடல் மிகுதி யால் ' மானமில்லாப் பன்றி ' என்று எம்பெருமானைப் பழித்துப் பேசி னாலும், விரோதிகளாக நின்று பழிக்குமவர்கட்கு அடம் அறும்படி " தேசுடைய தேவர் " என்று உடனே சொல்லிவைக்கும் நேர்த்தி அநுப விக்கத்தக்கது.

" பேசியிருப்பனகள் " வராக நாய னார் பேசியிருக்கும் பேச்சுக்களை வராக் சரமச் சுலோகம் குறிப்பது. "சரீரம் மனம் முதலியவை பாங்கா யிருக்கும்போது என்னை ஒருவன் நினைப்பானாகில் பின்பு அவன் மூச் சடங்கி முடியும் அளவானபோது அவனை நான் நினைவுகொண்டிருந்து நற்கதியை நண்ணுவிப்பேன்" என்பது இந்தப் பேச்சுக்கள் தன்னளவில் பலிக்கக் காணாமையால் வருந்துகின்றாள் ஆண்டாள். ' பேசி யிருப்பனகள் ' என்றவிடத்திற்கு வியாக்கியானத்தில் அருளிச் செய்யும் பொருள் வேறாயும் சீரிதாயும் இருக் கும். இதையும் விளக்குவோம்.

' செல்வனார் பேசியிருப்பனகள் '. " செல்வர் சொல்லுக்கஞ்சாரே " விபூதி விஷயமாகவும் ஆச்ரிதர் விஷய மாகவும் சொல்லியிருக்குமவை என் னுதல்; அன்றிக்கே ' நின்னைப்பிரி யேன்; பிரியிலும் ஆற்றேன் ' என்றாற் போலே கூடியிருந்தபோது சொன் னவை என்னுதல்" "பேர்க்கவும் பேராவே "; " இவற்றை மறந்து பிழைக்கலாம் என்று பார்த்தால், நெஞ்சில் நின்று போ த்தாலும் பேருவ தில்லை: " தாமுற்ற போதெல்லாம் எண்ணாதே தம்முடைய நன்மை களையே எண்ணி அவர் நம்மை மறந் தாலும் "— கொடிய என் நெஞ்சம் அவன் என்றே கிடக்கும் " என்னும் படி நம்மால் மறந்து பிழைக்கப் போகிறதில்லை என்கின்றாள் " என் பது வியாக்கியான ஸூக்தி.

நம்மாழ்வார் முதல் பிரபந்தமாகிய திருவிருத்தத்தில்,

பெருங்கேழ லார்தம பெருங்கண்
மலர்ப்புண்ட ரீகம் நம்மேல்

ஒருங்கே பிறழவைத் தார்இவ்வ
காலம் ஒருவர் நமபோல்
வருங்கேழ் பவருளரே ?

*(திருவிரு-45)*

*[கேழலார்-வராகரூபி; புண்டரீகம்-தாமரை; பிறழவைத்தார்-கடாட்சித்தார்; பிறழ-மிக, கேழ்பவர்-சம்பந்தம் பட்டவர்].*

என்று பேசுவார் நாயகி நிலையில் இருந்து கொண்டு இதில் 'புணல் தரு புணர்ச்சி' என்ற துறைகாட்டப் பெறுவதாகக் கொள்ளலாம். "நாம் முன்பு நீர்நிலையில் விளையாடச் சென்ற போது பெருவெள்ளத்தில் அகப்பட்டு ஆழ்ந்து முடிந்து போக இருக்குந் தருணத்தில் அவர் தமது அபாயத்தைக் கருதாது துணிந்து வந்து இறங்கி நம்மை எடுத்துக் கரைமேல் விட்டு உயிர்காத்தவர் அல்லரோ?' என்றும், 'இப்படிப்பட்ட பேறு அவரோடு வேறு யாவர்க்கு நேர்ந்தது?; என்றும் 'இவ்வாறு உதவி செய்வதற்கு முன்னமே அவரோடு நாம் இயற்கைப் புணர்ச்சி பெற்றோமன்றோ?' என்றும் பழைய தொடர்புகளை எடுத்துச் சொல்லி மனத்தைத் திருப்புதல் ஒரு கிளவித்துறை. அத்துறையில் இப்பாசுரத்தை சிந்தித்து மகிழலாம்.

இப்பாசுரத்தில் நீரிடை உதவியை நினைத்துரைத்தல காணவில்லையே எனக் கருதுதல் வேண்டா; 'பெருங்கேழலார்' என்றது அதுவே. எம்பெருமான் வராகமூர்த்தியாய்த் திருவவதரிததது பிரளயப் பெருங்கடலினுட்பட்டுஆழ்ந்த பூமிப்பிராட்டியை அதில் நின்று எடுததுப் பாதுகாப்பதற்காதலால், அநுதான நீரிடை உதவியாதலால், அஃது இங்கு நினைந்து உரைக்கப்பட்டதாகக் கொள்க. அவ்வுதவி நிலமகட்குச் செய்ததாயினும் ஆச்ரிதவர்க்கங்களில் எவர்க்கு எவ்வுதவி செய்யினும் அதனை மற்றுள்ள அடியாரனைவரும் தததமக்குச் செய்ததாகப் பாவிக்கும் முறைமை சம்பிரதாயத்தில் உண்டு.

ஆதலால் ஆழ்வார் நாயகி அவ்வுதவியைத தனக்கேயாகக் கொள்ளக் குறையில்லை. அன்றியும்: "பின்னை கொல்? நிலமாமகள் கொல்? திருமகள் கொல்? பிறந்திட்டாள்" என்ற ஐககியமும் உண்டு பராங்குச நாயகிக்கு. "தம் பெருங்கண் மலர்ப்புண்டரீகம் நம்மேல் ஒருங்கே பிறளவைத்தார்" என்றது-தன்னை எம்பெருமான் குளிர நோக்கினமையை இதனால் தெரிவிக்கின்றாள். தன்மேல் வைத்த கடாட்சத்தைமாற்றிப் பிராட்டியின் பக்கலிலே வைக்க வேண்டும் என்றாலும் மாற்றவொண்ணாதபடி வைத்திட்டான் என்பது தோன்ற 'ஒருங்கே' என்று காட்டுகினறார். "எங்கும் பக்க நோக்கறியான் என் பைந்தாமரைக் கண்ணனே" (திருவாய்) என்று பிற இடத்திலும் கூறுவர் தானான தனமையில்.

இங்ஙனம் அருளிச் செய்த ஆழ்வார் திருவிருத்தத்தின் இறுதியிலும்

. ............

ஏனத் துருவாய் இடந்தபி
ரான் இருங் கற்பகஞ்சேர்
வானத் தவர்க்குமஅல் லாதவர்க்
கும்மற்றெல் லாஎவர்க்கும்
ஞானப் பிரானையல் லால்இல்லை
நான கண்ட நல்லதுவே"

*(திருவிருத்-99)*

*(இடந்த-எடுத்து வந்த; வானத்தவா-தேவர்; ஞானம்-அறிவைக் கொடுககும).*

எனறு அருளிச செய்வர். 'மாறன் பணித்த தமிழ் மறைககு ஆறங்கங் கூற' வதரித்த மங்கையர் கோனும், தம பெரிய திருமொழியின் தொடக்கத்திலேயே,

'பன்றியாய் அனறு பாரகங் கீண்ட
பாழியான் ஆழியான் அருளே
நன்று'

(பெரி. திரு. 1-1:4)

என்று இவற்றைப் பின்பற்றியே அருளிச் செய்ததாகப் பணிப்பர் சம்பிரதாயம் வலல பெரியோர்.

திருவாய்மொழியின் இறுதியிலும் இந்த ஆழ்வார்,

நீல வரையிரண்டு பிறை கவ்வி
நிமிர்ந்த தொப்ப
கோல வராகம் ஒன்றாய் நிலம் கோட்
டிடைக்
கொண்ட எந்தாய்'

*(திருவாய்-10-10:7)*

என்று வராகாவதாரத்தையே அநுசந்திக்கின்றார். இப்பாசுரத்தில் 'இரண்டு பிறை கவ்வி நீலவரை நிமிர்ந்த தொப்ப' என்று கொண்டு கூட்டிப் பொருள் கொள்ள வேண்டும். 'இரண்டு பிறையைக் கவ்விக் கொண்டு அஞ்சனமலை நிமிர்ந்தாற் போலே கோல வராகமாகி நிலத்தை எயிற்றிடையிலே கொண்ட பெருமானே' என்கின்றார். கோல வராகம் நீலமணி பர்வதத்தையும், இரண்டு பிறைகள் வராகத்தின் இரண்டு கோரப்பற்களையும் ஒப்பிட்டுக் காட்டியுள்ள நயத்தை நாம் அநுபவிக்க வேண்டும். ஈண்டுக் கோரப்பற்களில் ஏந்திக்கொண்ட நிலத்திற்கு ஓர் உவமை சொல்லப் படாததற்குக் காரணம் பூமி தனிப்பட ஒரு பொருளாகத் தெரியாமல் இருந்தது என்பதைக் காட்டுவதற்கு ஈண்டு "பிறையில் மறுவோ பாதியாய்த்து திரு எயிற்றில் கிடந்த பூமி'. என்ற ஈட்டின் சுவையறிந்து மகிழத் தக்கது.

திருமங்கையாழ்வார் :

வராகப்பெருமானுக்கு 'ஞானப்பிரான்' என்று திருநாமம் வழங்குதல் வைணவ சம்பிரதாயம். இதனை,

ஏனத்தின உருவாகி
நிலமங்கை எழில்கொண்டான
வானத்தில் அவர் முறையால்
மகிழ்ந்தேத்தி வலங் கொள்ள
கானத்தின் கடல்மல்லைத்
தலசயனத் துறைகின்ற
ஞானத்தின ஒளி உருவை
நினைவார்என் நாயகரே

*(பெரு. திரு. 2-6:8)*

(ஏனம்-வராகம்; நிலமங்கை-பூமிப் பிராட்டியார்; கானம்-காடு )

திருமங்கையாழ்வார் அருளிச் செய்துள்ளமையாலும் அறியலாம். வைணவ சம்பிரதாயத்தை யொட்டியே ஆழ்வாரும 'ஞானத்தின் ஒளி உரு' எனக் குறிப்பிட்டுள்ளதைக் கண்டு மகிழலாம். சடகோபரும் 'ஏனத்துருவாய் இடந்த பிரான் ...ஞானப்பிரான' (திருவிருத்தம்-99) என்று கூறியுள்ளதை மேலே கண்டோம்.

'கானத்தின் கடல்மல்லை'; அக்காலத்தில் கடல்மல்லையைச் சுற்றிலும் காடுகள் இருந்தமை இதனால் அறியப்படுகின்றது. எம்பெருமான் வராகவதாரமாக எழுந்தருளிய போது நெடுங்காலம் காட்டிலே விளையாடியதாக ஒரு புராண வரலாறு உண்டு. இதனைத் திருவுள்ளங் கொண்டு பெரியாழ்வாரும்,

வானத் தெழுந்த
மழைமுகில்போல், எங்கும்
கானத்து மேய்ந்து
களித்து விளையாடி
ஏனத்து உருவாய்
இடந்தஎம் மண்ணினை
தானத்தே வைத்தான்.

பெரியாழ். திரு. 2-10:9)

(வானம்-ஆகாயம்; முகில்-மேகம் கானம்-காடு; இடந்த-கோட்டால் குத்தி எடுத்த; மண-பூமி; தானம்-அதன் இருப்பிடம்).

என்று அருளிச் செய்துள்ளமை ஈண்டு எண்ணி மகிழத்தக்கது. இந்த ஆழ்வாரே இந்த அவதாரத்தை "பன்றியும் ஆமையும், மீனமும் ஆகிய பாற்கடல் வண்ண' (ஷை 3-3:7)என்று ஆமை, மீனம் ஆகிய இரண்டு அவதாரங்களுடன் சேர்த்து அநுபவித்து மகிழ்கின்றார்.

மேற்குறிப்பிட்ட திருக்கடல் மல்லை ஞானப்பிரானைப்பற்றி வரலாறு ஒன்று உண்டு. திருக்கடல் மல்லையில் அரிசேகரன் என்ற அரசன் நாள்தோறும் உச்சிக்காலத்தில் அண்மையிலுள்ள 'திருவிடவெந்தை' என்ற திவ்யதேசம் சென்று அங்கு எழுந்தருளியுள்ள ஆதிவராகமூர்த்தியைச் சேவித்துவிட்டு ஊருக்கு வந்து திருவாராதனை முடித்த பிறகு உணவு கொள்வது வழக்கம். ஒரு நாள் வராகமூர்த்தி இவ்வரசனின் பக்தியை உலகினருக்கு அறிவிக்கத் திருவுள்ளங் கொண்டார். தானே ஒரு கிழ அந்தணர் உருவங் கொண்டு பூமிப்பிராட்டியாரை ஒரு பெண்ணாக அழைத்துக் கொண்டு திருக்கடல் மல்லைக்கு எழுந்தருளினார் அப்பொழுதுதான் அரசன் திருவிடவெந்தைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான். அந்தணர் அரசன் எதிர் சென்று பசிக்கு உணவு தருமாறு கேட்டார். அரசன் தான் திருவிடந்தை சென்று திரும்பி வந்தவுடன் அவருக்கு வேண்டுவன நல்குவதாகக் கூறினான். கிழவரோ அச்சமாதானத்தைக் கேட்பதாக இல்லை. ஆகவே அரசன் அந்தக் கிழவரை வராக மூர்த்தியாகப் பாவித்து உபசரித்துத் திருவாராதனை சமர்ப்பித்தான. உடனே வராகமூர்த்தி அரசனது பக்திக்கு மெச்சிப் பூமிப்பிராட்டியைத் தனது வலப்புறத்தில் வைத்துக் காட்சி தந்தருளி ஞானோபதேசமும் செய்தருளினார். இந்த நிலையில் தான் திருக்கடல்மல்லையில் எழுந்தருளியுள்ளார் இங்கு எம்பெருமான் தனது வலக்காலை ஆதிசேடன் மீது வைத்துக்கொண்டும் இடத் தொடையின்மீது பூமிப்பிராட்டியைத் தாங்கிக் கொண்டும் உள்ளார். இவர் திருவலவெந்தை என்று வழங்கப் பெறுகின்றார்.

இந்த ஆழ்வார்தாம வராக நாயனாரைப் பல இடங்களில் நன்றாக அநுபவித்து மகிழ்வதைக் காணகின்றோம். முதல் திருமொழியிலேயே அநுசந்தித்து மகிழ்வதை மேலே கண்டோம். சிலவற்றை இனிக் காணபோம். திருவயிந்திபுரத்து எம்பெருமானை மங்களாசாசனம் செய்யும் திருமொழியின முதற பாசுரத்தில்,



ஸ்ரீ சுந்தரமௌீஸ்வரர் திருக்கோயில்
ரிஷிகேஷ்.

இருந்தண் மாநிலம் ஏனம தாய்
வளை
மருப்பினில் அகத்தொடுக்கி
கருந்தண் மாகடல் கண்துயின் றவ
னிடம்

(பெரி. திரு. 3-1:1)

(இரு தண்-மிகக் குளிர்ந்த; வளை மருப்பு-வளைநத கோரப்பல்; ஒடுக்கி-அடக்கி).

என்று அநுசந்திக்கின்றார். திருச்சேறை எம்பெருமானை மங்களாசாசனம் செய்யும்போது 'பண்டு ஏனமாய் உலகை அன்று இடந்த பண்பாளா!' (ஷை 7-4.6) என்று விளிக்கின்றார். திருவழுந்தூர் எம்பெருமானைச் சேவிக்கும்போது,

சிலம்பு முதல் கலன் அணிந்தோர்
செங்கண் குன்றம
திகழ்ந்த தெனத திருவுருவம்
பன்றி யாகி
இலங்குபுவி மடந்தைதனை
இடந்து புல்கி

எயிற்றிடைவைத் தருளிய எம
ஈசன் காண் மின்

(திரு 7-8:4)

(சிலம்பு-தண்டை; கலன்-ஆபரணம்; இலங்கு-விளங்குகின்ற; புவி மடந்தை-பூமிப்பிராட்டி; இடநது-குத்தி எடுத்து; புல்கி-அணைந்து; எயிறு-கோர தந்தம்).

என்று அநுசந்தித்து மகிழ்வார். 'செங்கண் குன்றமாக' வராகவதாரத்தைக் கண்டு மகிழ்வது நம் உள்ளத்தைக் கவர்கிறது. பொதுவாக அவதாரங்களில ஈடுபடும்போது இந்த அவதாரத்தை,

தீதறு திங்கள் பொங்கு சுடரும்பர்
உம்பர் உலகேழி னோடும் உடனே
மாதிர மண்சு மந்து வடகுன்று
நின்ற மலையாலும் ஏழு கடலும்
பாதமர் சூழ்கு ளம்பின் அகமண்ட
லத்தின் ஒருபால் ஒடுங்க வளர்சேர்
ஆதிமுன் ஏன மாகி அரணாய
மூர்த்தி அது நம்மை ஆளும் அரசே

(திரு 11-4:3)

(தீதுஅறு-குற்றமற்ற; உம்பர்-தேவர்கள்; மாதிரம்-திசைகள்; வடகுன்று-மேருமலை; பாதம் அமர்-திருவடிகளில் பொருந்தி; அகமண்டலம்-உள்வலயம்; ஒடுங்க-ஒடுங்கும்படி; அரண்-இரட்சகம்)

என்று பேசுகின்றார். வராகவதாரத்தின் திருமேனிப் பெருமை இதில் வருணிக்கப்பெறுகின்றது. அண்டபித்தியில் சார்ந்து கிடந்த பூமிப் பிராட்டியை அதனின்று ஒட்டுவிடுவித்தெடுக்கும்போது மேருமலை முதலிய பெரிய பெரிய பொருள்களெல்லாம் வராக நாயனாரின் திருக்குளம்பில் ஒடுங்கிப்போயின என்று ஆழ்வார் கூறும்போது அவரது பேருருவத்தை மனத்தால் எண்ணிப் பார்க்க முடிகின்றது.

இந்தக் கருத்தையே திருத்தெற்றியம்பலத்தின் எம்பெருமானைச சேவிக்கும்போது,

சிலம்பின் இடைச் சிறுபரல்போல்
பெரிய மேரு
திருக்குளம்பில் கண கணபத்
திருஆ காரம்
குறுங்கநில மடந்தைதனை
இடந்து புல்கிக்
கோட்டிடைவைத் தருளியஎங்
கோமான் கணடீர்.

(திரு 4-4:8)

(சிலம்பு-தண்டை; பரல்-சிறு கற்கள்; கணகணப்ப—கணகண என்று ஒலிக்க; திருஆகாரம்-பெரிய பிராட்டியிருக்கும் இருப்பு; நில மடந்தை-பூமிப்பிராட்டி; இடந்து-குத்தி எடுத்து; புல்கி-தழுவிக் கொண்டு, கோடு-கோரப்பல்)

என்று மேலும் தெளிவாக்குவார். மிகப்பெரிய வராக உருவத்தின் திருக்குளம்பில் மேரு மலை தண்டைச் சிலம்பின் மிகச் சிறிய பரல்கல்போல் கணகண என்று ஒலித்ததாகக் கூறுவர். இந்தப் பேருருவத்துடன் பூமிப் பிராட்டியை அண்டபித்தியினின்று ஒட்டுவிடுவித்தெடுக்கும்போது 'அகல கில்லேன் இறையும்' என்று பெரிய பிராட்டியிருக்கும் இருப்பும் குலுங்கி விட்டதாம். பெரிய திருமடலிலும் இந்த அவதாரத்தை

மன் இவ் அகலிடத்தை
மாமுதுநீர் தான் விழுங்க
பின்னுநோர் ஏனமாய்ப்
புக்கு வளை மருப்பில்
கொலநவிலும் கூறுநிமேல்
வைத்தெடுத்த கூத்தனை.

(அகல் இடம்-பூமி; முதுநீர்-கடல்: ஏனம்-பன்றி; வளைமருப்பு-வளைந்த கோடு; நுதி-நுனி).

பூமியைக் கோட்டின் நுனியில் வைத்துக்கொண்டு எழுந்தருளும்போது அக மகிழ்ச்சி தோற்றக் கூத்தாடிக் கொண்டே எழுந்தருளினன் என்று கூறுகின்றார் ஆழ்வார்.

இங்ஙனம அழ்வார்கள் இந்த அவதாரத்தைத் தம் பாசுரங்களில் அநுசந்தித்து மகிழும்போது அப்பாசுரங்களில் ஆழங்கால்பட்டு நாம்அவற்றை ஓதும்போது அவதாரக் காலத்திற்கே தள்ளப்பட்டு அந்த அவதாரத்தை நேரில் கண்டு சேவிப்பது போன்ற உணர்ச்சிப் பெருக்கில் நாம் திளைக்கின்றோம்.

★



மயில் வாகன்-ஹளேபீடு.

(20-ம் பக்கத் தொடர்ச்சி)

கிறான். அந்த எண்ணத்தினால் சுக மற்றும் சுவாசந்திரியமற்றவனாகவும் இருக்கும் இவன் பிரகிருதியின் ஸங் கத்தினால் ஏற்பட்ட கர்மதோஷங் களினால் தேவர், திர்யக், மனிதர் முதலிய யோனிகள் பிறவியை அடை கிறான். தேக சம்பந்தத்தினால் தான் ஆன்மாவுக்குப் பிறப்பும், இறப்பும் ஏற்படுகிறது. உண்மையில் ஆன்மாவுக்கு பிறப்புமில்லை; இறப்பு மில்லை பிரகிருதியாகவும், கால மாகவும் இருக்கும் பகவானே இந்தப் பிரபஞ்சத்தை படைக்கிறார். ஆயி னும் அவர் காலத்தையும் பிரகிருதி யையும் கடந்து நின்றே செயலாற்று கிறார். பிரகிருதியின் சொரூபம ஸ்தூலமாகக் காணப்படுகிறது. புரு ஷன், காலம் ஆகிய இரண்டும் சூட் சம ரூபத்திலேயே இருப்பதினால் இதையறிவதற்குத்தான் சாஸ்திர ஞானம் தேவைப்படுகிறது. ஸ்ரீ பகவான் கபிலா மேலும் சொல் கிறார். "பலனைக் கருதாத நிஷ் காமிய கர்மங்கள் நிர்மால்யமான மனத்தால் செய்யப்பட வேண்டும். ஞானம், வைராக்கியம், தவம், யோகம் ஆகியவற்றால் இப்பிறவியில் இரவு பகலாக கர்மங்கள் பொசுக்கப் படுகின்றன. புருஷனுடைய பிரகிரு தியான ஸ்வரூப நாசத்தை அடைந்து விடுகிறது. எப்போதும் என்னிடத்தி லேயே தம் மனத்தை செலுத்திய ஆத்மாராமனுக்கு பிரகிருதி ஒரு போதும் தீங்கைச் செய்யாது. தேவ ஹூதியே! யோகத்தை விட பிற வற்றைக்காரணமாக கொள்ளாததும் யோகத்தினாலேயே நிறைவு பெற்ற வையான அணிமாதி சித்திகளில், சித் தனுடைய சித்தமானது. எப்போது பற்றடைவதில்லையோ, அப்போதே அழிவற்ற ஸ்வரூபப் பிராப்தி ஏற்படு கிறது. மிருத்யுவும் சிரிப்பதில்லை!"

**அஷ்டாங்க யோக விளக்கம் ;**

பகவான் கபிலர் தொடர்கிறார், "மனுவின் மகளே! மணமானது எந்த விதியினால் தெளிவடையுமோ அந்த பிரம்ம மார்க்கத்தை அடைய அந்த சாலம்பன யோகத்தை சொல் கிறேன்! கேட்பாயாக.

பிரக்ருதியின மாயையான தோற றத்திலேயே பற்றுதலுடன் அலைந்து திரியும் மனதை இடையூறுகளால் தடைப்படாத பகதியிலும், வைராக் கியத்திலும லயிக்கச செய்து மெல்ல மெல்ல தன்வயப்படுத்திக் கொள்ள வேண்டும். சக்திக்கு ஏற்ப ஸ்வதர் மங்களை அனுஷ்டித்தல், தாமததிற்கு தீங்கு தரும் செயலிலிருந்து விடுபடு தல, கிடைத்தவற்றைக் கொண்டு திருப்தியடைதல், ஸகுண நிர்க்குண பிரம்ம ஞான முளளவர்களின் சர ணத்தை அர்சசித்தல், மோட்சதா மத்தில் பற்றுகொள்ளுதல், மித மான பரிசுத்தமான ஆகாரத்தை அருந்துதல், ஞான நெருக்கமாயும், பீடைகளுமற்ற தேசத்தில் வசித்தல், அஹிம்சை, சதயம், இவற்றோடு உடலை வளாப்பதற்குரிய பொரு ளைத் தேடுதல், புலமைக்கும், தவம், சௌசம, வேத உபநிஷதத் பிரணவம் போன்ற பவித்ரமான மந்திரங களை அத்யயனஞ் செய்தல், சாஸ் திரத்தில் சொலலியபடி பகவானை அர்ச்சித்தல, மௌனமும் ஆஸன ஜயத்துடனும் கூடிய உடலசையா மையைப் பெற்று மெதுவாக மூச்சுப் பயிற்சியும் செய்து விஷயத்திலிருந்து புலன்களை திருப்பி இதயம் என்ற மாமிசப் பிண்டத்தில் மனத்தினை திருத்தி, மூலாதாரம் முதலிய ஆறு ஸ்தானங்களில் ஏதேனும் ஓரிடத்தில் மனதுடன்கூடிய பிராணனை நிறுத்த லும் பகவானுடைய படைப்புமுதலிய லீலைகளை எப்போதும் தியானிப்ப தும, விரதம், தானம முதலியவற்றால் தீயவழியில் சென்ற மனதை திருப்பி பிராண ஜயத்தை அடைந்தவனாக வும இருந்து கொண்டு புத்தியினால் யோகத்தில் செலுத்த வேண்டும். சுத்தமான நிலத்தின் மீது தர்ப்பை புற்களைப் பரப்பி அதன் மீது மான் தோல் விரித்து அதன் மீது தூய ஆடை விரித்து பிராணாயாமத்தை பயில வேண்டும். இவ்வாறு உயிர்க் காற்றின் மார்க்கத்தைச் சுத்தம் செய்து கொண்டு, மனதை சலனமற்ற தாக உறுதியாக செய்து கொள்ள



ஸ்ரீ தீர்த்தேச்வரர் த்ரிபுரஸுந்தரி (ஸோமாஸ்கந்த அவஸரம்)

வேண்டும். மனமானது யோகத்தினால் நன்கு உறுதியடைந்ததும தனது நாசியின நுனியில் பார்வையைச் செலுத்தி பகவானுடைய ஸ்வரூபத்தை தியானிக்க வேண்டும். பகவானை கேசாதி பாதம் வரை அங்கமங்கமாகத் தியானித்து பழக வேணடும். இந்நிலையில்மனிதன் அகண்ட சச்சிதானந்த பிரம்மாத்ம ஐக்யஸ்வரூப ஸாக்ஷாத்காரத்தை அடைநது விடுகிறான். அதற்குப் பிறகு அவன் ஜீவன் முக்தி நிலையை அடையும் போதுதான் சித்தனாகிறான். அத்தகையவனுக்கு தேகமானது ஆஸனத்தில் இருந்ததும், பிராப்த கர்மாதி காரணமாக ஆஸனத்தை விட்டு வெளியேறியதையோ திரும்ப வந்ததையோ அறிவதில்லை. அத்தகையவன் தாய், தந்தை, உற்றோா உறவினர் என்பதையும் தன் உடல் தன்னுடையது என்றும் எண்ணாமல் இவை யாவும் தேவன் விஷ்ணுவினுடையது என்று எண்ணுகிறான்" என்று அஷ்டாங்க யோக ஸாதன அனுஷ்டானங்களை விளக்குகிறான்.

**பக்தி யோக விளக்கம் :**

தேவஹூதியானவள் கபிலரை நோக்கி, "பிரபோ! பக்தியோகத்தின் வழிகளை விரிவாக சொல்ல வேண்டுகிறேன்" என்றுகூற பகவான தன் தாயிடத்தில் பின்வருமாறு சொல்லத்துவங்குகிறார்; "பலன்கள் நிமித்தமாக பக்தியிலும் பேதம் ஏற்படுகிறது. பக்தி யோகமானது சிரவணம், கீர்த்தனம, ஸ்மரணம், பாத சேவனம், அர்சசனம், வநதனம், தாஸ்யம், ஸக்யம், ஆத்ம நிவேதனம் என்று ஒன்பது விதமாகிறது. என்னிடத்தில் பக்தி செய்பவர்கள மூன்று வகையினர். சம்பத்தையோ பொறாமையோ ஹிம்சையையோ கொண்டு கோபத்துடன் பக்தி செய்பவர்கள் தாமஸ பக்தர்கள். விஷயங்களையோ ஐஸ்வர்யத்தையோ உயர்வையோ மனதில் சங்கற்பித்து கொண்டு எவன் விக்ரகங்களில் என்னை தரிசிக்கிறானோ அவன் ராஜஸன். பாப நிவர்த்தியை முன்னிட்டோ, பகவத் கிருபையை உத்தேசித்தோ விதி வழியாக அவசியம் பகதி செய்தே தீரவேண்டும என்ற கருததுடன் எவன் கர்மாககளை செய்கிறானோ, தனித்த கருததுடைய அவன ஸாத்விக பக்தன். எல்லோருடைய இதயத்திலும் வீற்றிருக்கும் புருஷோத்தமனான என்னிடத்தில பலன கருதாமல பேதமற்ற வகையில் தொடர்ந்து மனதை செலுத்துவதே சிறந்த பக்தியாகும். கங்கை நதியின் சங்கமத்தில் ஸமுத்திரத்தின் அலைகள் எத்தனை தூரம் நதியையே திருப்பிய போதிலும், கஙகை நீர் ஸமுத்திரத்திலேயே சங்கமமாவதுபோல பகவான், ஸாலோக்ய ஸாமீப்யாதி எவ்வளவோ பலன்களை காட்டியபோதும் திரும்பாமல் எனனிடமே மனதை லயித்து எனது கையங்கர்யத்தை தவிர்த்து மற்றவைகளை விரும்பாது பக்தன இந்த பக்தி யோகத்தினால் முக்குணத்தையும் கடந்து பிரம்ம பதத்தை அடைந்து விடுகின்ற நிலையே மோக்ஷமாகும்.

நான் எல்லா உயிர்களிலும் அந்தராத்மாவாக இருக்கிறேன். மனிதன் இதை உணராமல் அர்ச்சனையில் மட்டும் நான இருப்பதாக நினைத்து அதில் என்னை பூஜிக்கிறான். எவன் தனககும், பிறர்க்கும் இடையே பேதத்தை காண்பானோ அவனுக்கு மிருத்யு ரூபமாகத்தான் அதிக பயத்தை உணடாக்குகிறேன. எனவே சர்வ பூதங்களிலும் அநதர்யாமியாக இருபபதால் ஸர்வ பூதங்களிலும் வசிககும் என்னை அவற்றிற்கு செயயும தான மானங்களிலும் ஸம தர்சனத்திலும் பூஜிக்க வேணடும். உயிரியகத்தில் சித்தமுள்ளவை சிறந்தவை. அவற்றில் இந்திரியங்கள் சிறந்தவை. அவற்றில் செயல்படக்கூடிய ஐந்து இநதிரியங்கள் சிறந்தவை. இரண்டு கால்களுள்ள மனிதர்களில் வேதமறிந்து பாடம் செய்பவன் சிறந்தவன். அவர்களில் ஐயங்களைப் போக்குபவன் சிறநதவன். அவர்களில் சகல ஆசைகளையும் ஒழித்தவன் சிறந்தவன. அத்தகையவனுக்கும் எனக்கும அநிக பேதம் இருப்பதில்லை. இவ்வாறு யோக மார்க்கம் பக்தி மார்க்கம இவற்றில் ஏதாவது ஒன்றைக் கடைப்பிடித்தாலும ஒருவன் இறைவனை அடையலாம்" என்றுகபிலர் தன் தாயாருக்கு உபதேசித்தார்.

**காலத்தின் ஸ்வரூபம் :**

பகவான் காலத்தின் ஸ்வரூபத்தை பின்வருமாறு விளக்கிச் சொல்கிறார். "காலம் பகவத் ஸ்வரூபமானது. பேத திருஷ்டியுள்ளவர்களுக்கும், மஹாதாதிகளுக்கு அபிமானிகளுமான ஜீவர்களுக்கும் இதனிடமிருந்தே பயமுண்டாகுகிறது. ஸ்ரீவிஷ்ணு என்ற பெயருடைய இந்த காலம் யாவருக்கும் ஆச்சரியமாக உள்ளே பிரவேசித்து பூதங்களை கொண்டே பூதங்களை அழித்து யாவற்றையும் தன் வசமாக்கி பிரபுவாக விளங்குகிறது. காலத்துக்கு வேண்டியவனுமில்லை விருப்புமில்லை, வெறுப்புமில்லை. தவறுள்ளமனிதனிடத்தில் அது நிதானமாக பிரதேசித்து நாசத்தை செய்கிறது. இந்த காலத்தினால்தான் காற்று வீசுகிறது! சூரியன் காய்கிறது! மழை பொழிகிறது! நட்சத்திரங்கள் ஒளிவிசுகின்றன. நதிகள் ஓடுகின்றன! சமுத்திரஙகள் அலை மோதுகின்றன. ஆகாயம் மூச்சு விடுவதற்கு இடம் தருகிறது! இந்த பூமி ஓயாமல சுழல்கிறது! இந்த காலம்தான் பிரமமாதி தேவர்கள் மூலமாக சிருஷ்டி காரியத்தில் ஈடுபட்டு பிதா முதலிய ஜனனத்தினால் புத்திரன் முதலியஜனனத்தை உண்டு செய்து ஆதியை செய்து தான் அனாதியாக மிருத்யுவினால் யமதர்மராஜனையே மரிககச்செய்து ஆனந்த ரூபமாக விளங்குகிறது. எல்லாமே காலம் தான்!"

### மனிதப் பிறவியின் மயக்கங்கள் :

கபிலர் மேலும் தொடர்கிறார்: "காற்றின் வலிமையினால் தள்ளப் பட்ட மேகங்கள் அங்குமிங்குமாக சிதறிப் போனாலும் கூட அத்தகைய நிலைமை காற்றினால்தான் தனக்கு நேரிட்டது என்பதை மேகங்கள் உண ருவதில்லை. இதைப் போலவே மனிதன் சுகத்தை விரும்பி எந்தெந் தப் பொருள்களை மிகவும் சிரமப் பட்டுத் தேடுகிறானோ அவற்றை யெல்லாம் காலரூபியான பகவான் நாசமாக்குவதை அறிந்து கொள்வ தில்லை. அந்த நாசத்தால் ஜீவ னான மனிதன் சோகமடைகிறான். கெட்ட புத்தி உள்ள இந்த ஜீவன் நிலையற்ற உடல், மனைவி, மக்கள், வீடு, பசு, பணம் ஆகிய வற்றைத் தன்னுடையது என்று வேர் ஊன்றி நிலைத்த மனதுடன் எந்தக் காரணம் பற்றி யோனியை அடை கிறானோ, அந்த யோனி சுகத்தையே பெரிதாக எண்ணி, வெறுப்பு கொள் ளாமல், தேவனுடைய மாயையால் மோகத்தையடைந்து தன் உடலை யும் தன்னைச் சார்ந்தவர்களையும் காப்பதற்காகப் பாவங்களைச் செய் கிறான். மாதர் கலவி மயக் கத்தில் மயங்கியும், குழந்தைகளின் மழலைச் சொற்களைக் கேட்பதிலும், இன்பமடைந்தும் வாழ்க்கை நடத்து வதில் குடும்பத்தை காப்பாற்றுவதற் காக பாவம் செய்து நரகத்தை அடை கிறான். பொருள் தேடும் முயற்சி யில் பணம் கிடைக்காத போது பிறர் பொருள் மீது ஆசை வைக்கிறான். அவனால் சக்தியற்று பொருள் தேட முடியாத போது அவனது மனைவி மக்களே அவனை கிழட்டு எருதை போல விரட்டி வீட்டைக் காக்கும் நாய்க்கு சோறு போடுவது போல அவனுக்கு கொஞ்சம் உணவு போடு கிறார்கள். இந்த நிலையிலும் அதையும் உண்டு நரைதிரை மூப்பி னால் சாகும் வரை வீட்டில்தான் இருக்கிறான். முதுமையில் உட் கார்ந்த இடத்திலேயே உணவை உண்டு பொழுது போக்குவதால் காசம், கபம் போன்ற நோய்கள் அவனைப் பற்றுகின்றன. பலவீனப் பட்ட அவனை பந்துக்கள் சூழ்ந்து இருக்க படுத்தப் படுக்கையில் பேச முடியாமல் பந்துக்கள் அழுது கொண்டிருக்கும் போதே மரணத்தை யும் அடைகிறான். மரணத்திற்கு பிறகு அவன் உயிர், அவனது பாவங் களுக்குஏற்ப பலப்பல பிறவிகளுக்குப் பிறகு மனிதப் பிறவியை அடை கிறான்."

### கருவிலே உருவான காயம்

கபிலர் மேலும் தொடர்ந்து கூறு கிறார். "ஈஸ்வரனையே பிரவர்த்த மாகவுடைய பூர்வ ஜன்மத்தினால் உண்டான கர்மத்தினால் புருஷனின் வீரியத்தில் ஒட்டிய ஜந்துவானது தேஹப் பிராப்திக்காக வேண்டி ஸ்திரியின் கர்ப்ப பையில பிரவேசிக் கிறது. ஓர் இரவில் இந்தச் சுக்கிலச் பெண்ணின் சுரோணிதத்தை அடை கிறது. சுக்கிலச் சுரோணிதக் கலப் பினால் ஒருநாள் அந்த ஜீவன் உருப் பெறத் துவங்குகிறது. ஐந்து நாட் களில் சிமிழியைப் போல கெட்டியா கிறது. பிறகு மாமிசத்தன்மையை அடைந்து பிண்டமாகிறது. பறவை பிறவியானால் முட்டையாகிறது. ஒரு மாதத்தில் தலையும் இரண்டு மாதங்களில் நகம், உரோமம், எலும்பு, தோல் முதலியவைகளும் ஆண் பெண் குறிகளும்-ஒட்டைகளும் உருவாகின்றன. நான்கு மாதங் களில் இரத்தம், மாம்சம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, தோல், சுக்கிலம் போன்ற தாதுக்களும், ஐந்தாவது மாதத்தில் பசி தாகம் முதலியனவும் ஆறுவது மாதத்தில் கர்ப்பத்திலிருக் கும் இந்தக்கரு தாயின்வலதுபக்கத்தில் சுற்றியலையத் துவங்குகிறது. தாயி னால் அருந்தப்பட்ட அன்ன பானாதி களால் விருத்தியடைந்து தாதுக்களை யுடையவனாய், புழுக்களுக்கு உற் பத்தி ஸ்தானமும் தசை பிடிக்காதது மான மலமூத்திரக்குழியில் படுத்து உழல்கிறான். அங்குள்ள புழுக்களின் கடியினால் துள்ளுகிறான், துடிக் கிறான், மூர்ச்சையாகிறான். தாய் உண்ணும் மிளகாய், உப்பு, கார்ப்பு உஷ்ணம் ஆகியவற்றால் தாங்க முடி யாமல் வேதனையடைகிறான். கர்ப் பப் பையினுள்ளே உழன்று வயிற்றில் தலை வைத்து வசித்து முந்திய கர் மங்கள் நினைத்தும், நூற்றுக்கணக் கான பிறவிகளைப் பற்றியும் கருது கிறான். தன் கர்ப்பவாசக் கஷ்டங் களுக்காகத் தான் எடுத்த பிறவித் துன்பத்துக்காகவும் இறைவனைத் தன் இரு கைகளையும் தூக்கித்துதிக் கிறான். பத்தாவது மாதத்தில் சூதக வாயுவானது அவனைத் வெளி யேற்ற வேண்டி அவனை தலை கிழாக்கித் தள்ளிவிடுகிறது. மூச்சற் றவனாய் வெளியே வந்த அவன் ரத்த மும், சிறுநீரும் உள்ள பூமியில் விழுந்து, கர்ம வாஸத்தில் ஏற்பட்ட ஞானம் நீங்கி, விபரீத ஞானத்தால் கை கால்களை உதைத்து அழத் தொடங்குகிறான். அந்த நிலையில் அழுது கொண்டே பிறக்கும் இவன் பசிக்காக அழுகிறான் என்றே அவள்



பரசுராமேசுவரர்-குடிமல்லம்.

## பிரம்மன்

பிரம்ம தேவனுக்கு நான்கு தலைகள் இருப்பதற்கு உருவமாக பொருள் உள்ளது. கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய நான்கு யுக உருவக அமைப்பாகவும், அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு புருஷார்த்தங்களுக்கும், பிரம்மசரிய ஆசிரமம், கிருஹஸ்த ஆசிரமம், வானப்பிரஸ்த ஆசிரமம், சன்னியாச ஆசிரமம் ஆகிய நான்கு ஆசிரமங்களுக்கும் உருவகமாக அமைந்தவை பிரம்ம தேவனுடைய நான்கு தலைகள்.

தொகுப்பு: சோ ரங்கசுவாமி-நாட்டரசன் கோட்டை.

தாயும் மற்றவர்களும் நினைக்கிறார்கள். தனக்கு வேண்டாதவற்றை மறுக்கும் சக்தி அந்த சிசுவுக்கு இல்லை. இப்படியே வளர்ந்து பருவங்களையடைந்து வாலிபத்தில் மங்கையர் மாயைக்கு வயப்பட்டு விடுகிறான். ஸ்திரீ ரூபமான மாயைப் பற்றியும் அதன் வலிமையையும் யோசிப்பாயாக?

ஜீவனுக்கு உண்மையில் ஜனனமோ, மரணமோ கிடையாது. ஆகவே மரணத்தைப் பற்றி பயப்படத்தேவையில்லை. ஜீவனது ஸ்வரூபத்தை அறிந்து ஸ்திரீ ஸங்கத்தை ஒழித்து தீரனாக சஞ்சரிக்க வேண்டும். இந்த சரீரமும் அதற்கு ஆதாரமான உலகமும் மாயை என்று தீர்மானத்தில் கொண்டு சரீரம் கீழே விழும் வரையில் இங்கு சஞ்சரித்து வர வேண்டும்" என்கிறார்.

**பிறவிப் பலன்கள்.**

கபிலர் மேலும் தொடர்ந்து சொல்கிறார்: "எவன் கிரஹஸ்தாஸ்ரமத்திலேயே வசித்துக் கொண்டும் அதற்குரிய தர்மங்களையும் அனுஷ்டித்தும் அவற்றிலிருந்து இன்பத்தையும் பொருளையும் பெற்றும், பகவானுடைய ரூபமான தர்மத்தில் ஸ்ரத்தையோடு தேவர்களையும் பித்ருக்களையும் பூஜித்தும் வருகிறானோ அவன் சந்திர லோகத்தை அடைந்து அங்கு அனுபவிக்க வேண்டியதை அனுபவித்து விட்டு திரும்பவும் பூமிக்கு திரும்பி விடுகிறான். எவன் எதிலும் பற்றற்றவனாகவும், எல்லா கர்மங்களையும் ஈஸ்வரனிடத்தில் அர்ப்பணம் செய்பவனாகவும், சுத்த சித்தமுள்ளவனாகவும், நிவர்த்தி தர்மத்தில் பற்றுள்ளவனாயும் அகங்காரம் இல்லாதவனாயும், சத்வ குணம் உடையவனாயும், காமம் அற்றவனாகவும் இருப்பவன் சூரிய மண்டலத்தின் துவாரத்தினால் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவரும், காரிய காரணமாக இந்த பிரபஞ்சத்தில் பிரக்ருதியாக உற்பத்தி, நாசங்களை உண்டு பண்ணுபவருமான என்னை அடைகிறார்கள். எனவே தேவஹூதே! பகவத் பாகவதர்கள் நேரிலேயே என்னை அடைந்து வருகிறார்கள். அவர்களுக்கு கடினமில்லாமல் எளிதில் பகவத் பிராப்தி உண்டாகிறது. மற்ற கர்ப்பாதானம் முதல் ஸ்மசானாந்தமான கர்மாவை செய்யும் பிரம்ம உபாசகர்கள் சூரியனுக்குத் தெற்கே உள்ள வழியினால் பித்ரு லோகத்தை அடைந்து, தங்களுடைய புத்திரன் முதலியோரிடத்தில் திரும்பவும் பிறவியை அடைகிறார்கள்.

ஆகவே நீ சேவிக்கத்தக்க சரணாரவிந்தையுடைய பரமேஸ்வரனை அதிப்ரீதியுடனும், பக்தியுடனும் சேவிப்பாயாக! பக்தியோகமே வைராக்கியத்தையும் ஞானத்தையும் விரைவில் உண்டு பண்ணும். பக்தி யோகமே முடிவில் ஞானமாக முடிகிறது. பக்தி யோகமும் ஞான யோகமும் எளியன. ஞானயோகத்திற்கு ஆத்ம லாபம் பலன். பக்தி யோகத்திற்கு ஈஸ்வரப் பராப்தியே பலன். இவையிரண்டும் ஒன்றுதான் என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. பகவான் ஒருவர் தான். சாஸ்திரங்கள் ஏராளம். இந்த விஷயங்களை பிறரை வெறுப்பவனுக்கும் கிரஹஸ்தாசிரமப் பற்றுள்ளவனுக்கும், பகவத் பக்தி இல்லாதவனுக்கும் உபதேசிக்கலாகாது. சிரத்தையுடையவனுக்கும் வைராக்கியமும், திடசிந்தனையும், குரு பக்தியும், எல்லாவற்றையும்விட பகவானிடமே பக்தி செலுத்துபவனுக்கும் உபதேசிக்க வேண்டும்.

தேவஹூதே! எவன் இதை சிரத்தையுடன் ஒருமுறையாவது கேட்கிறானோ அவனும், எவன் என் மீது சிந்தனையுடன் உபதேசிக்கிறானோ அவனும் என் பதவியை அடைவார்கள். இது நிச்சயம், சத்தியம்" என்று கபில பகவான் உறுதியாக திருவாய் மலர்ந்தருளினார். பிறகு கபிலர் தன் தாயை நோக்கி, "ஹே மாதா! நான் சொன்ன இந்த மார்க்கத்தினால் ஜீவன் முக்தியை விரைவில் அடைவாயாக!" என்று கூறிவிட்டுத் தன் தாயிடம் விடைபெற்றுக் கொண்டு தமது அவதார காரணம் முடிவுற்றது எண்ணி தமது இருப்பிடமான வைகுண்டத்தை அடைந்தார். தேவஹூதையும் தன் புத்திரன் கூறிய பக்தி லோகத்தை தியானம் செய்து மோட்சத்தை அடைந்தாள்.

மனித வாழ்வு மேன்மையடைய தெய்வ பக்தி ஒன்றே சாதனமாகும் என்பதை பகவான் நமக்காக அவதாரம் செய்து எடுத்துக் கூறியுள்ள இந்த வழி முறைகளையும், நெறிகளையும் வாழ்க்கையில் கடைபிடித்து நலம் பல பெற்று பேரின்பப் பெருவாழ்வு வாழ இக்கலியுகத்தில் கண் கண்ட கடவுளாம், கேட்ட வரம் தந்தருளும் கருணை கடலாம், கோடான கோடி மக்களைக் காத்து திருவேங்கடத் திருமாமலை மீது கோவில் கொண்டுள்ள ஸ்ரீ வேங்கடாஜலபதியின் திருவடித்தாமரைகளைப் பன்முறை சேவித்து வாழ்வில் சகல சௌபாக்கியங்களையும் பெறுவோமாக!

★

# லிங்க பூஜை

ஸ்ரீராகவம் தஸராத்மஜ மப்ரமேயம
ஸீதாபதிம் ரகு குலாந்வய ரத்ன
தீபம்
ஆஜானுபாகும் அரவிந்த தளாய
தாக்ஷம்
ராமம் நிஸாசர விநாசகரம நமாமி

முன்னுரை.

ஸ்ரீ ராமர் லிங்க பூஜை செய்ததாக "ராமானந்த் ஸாகர்" தாம் படம் பிடித்துள்ள உத்தர ராமாயணத்தின தொலைக்காட்சித் தொடரில் ஸ்ரீ ராமர் தம்முடைய க்ருஹத்திலேயே சிவலிங்கத்திற்குத் தம் கையாலேயே அபிஷேகம் செய்து ஆராதனம் செய்வதாக சித்தரித்துள்ளார். தொடர்ந்து 3—–89 தேதி அன்றும் சிவலிங்க ஆராதனம் செய்வதாக காட்டியுள்ளார்.

உணமையில் ஸ்ரீ ராமாயண காவ்யத்தை இயற்றிய பகவான் வால்மீகியோ அவரைத் தழுவி தமிழில் இராம காதை இயற்றிய கம்ப நாடானோ, "கவி: காளிதாஸ:" எனப் போறறப்படும் மாபெரும் சிவ பக்தனான காளிதாஸன தம்முடைய "ரகுவம்சத்திலோ", "ராமசரித மானஸில்" பகவான் துளஸீ தாஸோ, அத்யாத்ம ராமாயணத்தில் பகவான் வியாசரோ, தெலுங்கில் "பாஸ்கர ராமாயணம்" இயற்றிய பாஸ்கரரோ பவபூதி "உத்தரராமசரிதத்திலோ" லிங்க பூஜை பற்றிய ப்ரஸ்தாவமே செய்யவில்லை. மேலும ஆநந்த ராமாயணம், க்ருத்திவாஸ ராமாயணம், வாசிஷ்ட ராமாயணம், அத்புத ராமாயணம, பாவார்த்த ராமாயணம் முதலியவற்றிலும் ஸௌராஷ்ட்ர ராமாயணம் ஸம்பு ராமாயணம் ஸம்க்ஷேப ராமாயணம் முதலியவற்றிலும் இக்கதை ஆதரிக்கப்படவிலலை எனபது அறியக்கொள்ளத்தக்கது.

வால்மீகி, கமபன, துளஸீதாஸ் இவர்களை வைஷ்ணவர்கள் என ஒதுக்கிவிட்டாலும் மாபெரும் சிவ பக்தனான கவி காளிதாஸ், தனது இஷ்ட தெய்வமான பார்வதி பரமேஸ்வரர்களை வணங்கி "ரகுவமசத்தை" அவர் ஆரமபத்திருந்தும் மொத்தம் 19 ஸர்கம் உள்ள ரகுவம்ச மஹா காவ்யத்தில் ஸ்ரீ ராமனின முன்னோர்களோ, ஸ்ரீராமனோ, ஸ்ரீராமபிரானுடைய வம்சத்தினரோ லிங்க பூசை செய்ததாக காளிதாஸ் 1564 ஸ்லோகததில் ஒன்றில்கூட சொல்லவில்லை.

திரு. ஆர். வி. ஸ்ரீதர ராமாநுஜன்
மதுரை.

மூன்று முறை காட்டப்பட்ட லிங்க பூஜைக் காட்சிகளுக்கு ப்ராசீனமான வால்மீகி ராமாயணத்திலோ, கம்பராமாயணத்திலோ ரகுவம்சத்திலோ, உத்தர ராமசரிதத்திலோ ஆதாரம் உண்டா? என்பதை இத்தொடர் கட்டுரை ஆராய்கிறது.

### வால்மீகி ராமாயணம்

ஸ்ரீ ராமாயணத்தை பொறுத்தவரை பகவான் வால்மீகி இயற்றியதே "ஆதி காவ்யம்" அதாவது முதல் நூல் மறற ராமாயணஙகள் அனைத்தும் வழி நூல்களாகும். எனவே ஒரு வாதம் எழும் போது, உதாரணமாக "ராமன் லிங்க பூசை செய்தாரா? இல்லையா" எனும் கேள்வி எழும் பக்ஷத்தில், முதல் நூலில் அது கூறப்பட்டிருந்தால்தான் ஒத்துக் கொள்ள வேண்டுமே ஒழிய முதல் நூலில் சான்று இல்லாத பக்ஷத்தில் அது தள்ளத்தக்கதே. மேலும் முதல் நூலில்உள்ள காப்பிய நாயகனுக்கோ, நாயகிக்கோ அல்லது வேறு எந்த ஒரு பாததிரத்திற்கோ வழி நூலில் கூறப்படும் கதை மூலம் பெருமை சேர்க்கப் படாமல் தாழ்த்துவதாக அமைந்தால் தள்ளத்தக்கது எனவும் பெருமை சேர்ப்பதாக இருந்தால் ஏற்றுக் கொள்ள வேண்டியதே என்பதும் நடு நிலையாளர்களின் கருத்தாகும்.

இக்கருத்தினபடி "வால்மீகி ராமாயணத்தை" அணுகுவோம்.

இராமர், சீதாதேவியோடுகூட தெய்வ வழிபாடு நிகழ்த்துவது "அயோத்யா காண்டம்" — ஸர்க்கம் 6-ல்விரிவாக விளக்கியுள்ளார் வால்மீகி பகவான். தமிழாக்கத்தை காண் போம்.

(a) அயோத்யா காண்டம்

ராமபட்டாபிஷேகத்திற்கு தயார்செய்தல்:

"கதே புரோஹிதே ராமஸ் ஸ்நாதோ
நியத மாநஸ:
ஸஹ பத்நயா விஸாலாக்ஷ்யா
நாராயண முபாகமத்"
(6—1)

(ஸ்நாத;) என்பதனால் உடல் தூய்மையும் (நயத மாநஸ:) என்பதனால் மன சுததியும் தெரிவிக்கப்படுகிறது. 'ஸஹ பத்நயா' பத்னியோடுகூட "பத்புர் நோ யஜ்ஞ ஸம்யோகே" என்று ஸ்திரீகத யஜ்ஞ ஸம்பந்தம் சொல்லும்போது "பத்னி" என்று பெயர் ஆகினறது. 'பத்நயா' என்கையால் யஜ்ஞ சம்பந்தம் தெரிவிக்கப்படுகிறது. மனைவி இல்லாமல் கணவனுக்கு யஜ்ஞம் செய்ய அதிகாரமில்லை என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. 'பத்நயா' என்ற மூன்றாம்

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

காலை

### வெள்ளிக்கிழமைகளில்

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

### ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, ரூ. 75/- | (இ) தோலோற்சவம் (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, ரூ. 180/- | | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப் படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

வேற்றுமையால்ஆராதனைகாலத்தில் ஸீதை உபகரணங்களை ஸமர்ப்பித்துக் கொண்டிருந்தாள் என்பது தெரிகிறது. 'விஸாலாக்ஷ்யா' நீண்ட கண்களையுடையவள் "ருதே மாயாம் விஸாலாக்ஷீம் தவ பூர்வ பரிக்ரஹாம்" (உனக்குப் பூர்வத்தில் பார்யையும நீண்ட கண்களையுடையவளுமாகிய மாயையைவிட்டு) என்று விஸாலாக்ஷி ஸப்தம் லக்ஷ்மியினிடத்தில் ரூடமாய் (முகயமாய்) இருப்பது பற்றி "ஸீதை" எனறு விசேஷித்து சொல்லாமல் ஸாமான்யமாக விசாலாக்ஷி எனறு சொல்லப்பட்டது. இதனால் ஸீதை லெக்ஷ்மியின் அவதாரம் என்பது அறிய முடிகிறது. (நாராயணம்) அங்கு நாராயணனென்றால் ஸ்ரீரங்கநாதனைச் சொல்லுகிறது. இவ்வாறு அர்த்தம் செய்யக் காரணம யுத்தகாண்டத்தில்விபீஷணனுக்கு ரங்கநாதனை தானம் செய்ததாக சொல்லப்படுவதே 'ஸஹ பத்ந்யா' ஸ்ரீ ரங்கநாதன் திருமேனியை அநுபவிக்கையாகிற ஸமுத்ரத்தை தாண்டுவதற்குத் துணையாய் இருப்பவள் என்று கருத்து. 'விஸாலாக்ஷ்யா' ஸ்ரீராமன் ஸ்ரீ ரங்கநாதன் சேவிப்பதை கண்டு கண்கள் சந்தோஷத்தினால் நன்கு மலர்ந்து, இமை கொட்டுவதையும் மறந்து அநுபவித்தாள் என்றபடி. 'விஸாலாக்ஷ்யா' ஸீதை நீண்டழகிய கணகளையுடையவளாயினும் அந்த ஸௌந்தர்யததில் கால் தாழாமல் நாராயணனையே உபாஸித்தாளென்று ராமனுடைய இந்திரிய ஜயத்தை (ஐம்புலனை வென்றதை) தெரிவிக்கிறது. 'விஸாலாக்ஷ்யா' என்று 3ஆம் வேற்றுமையாலும் ஸீதை அப்ரதானை என்றும் நாரயணன் மிகவும் இஷ்டனாகையால் ப்ரதானன் என்றும் தோற்றுகிறது. உபாகமத் (அகமத்) என்ற மாத்திரத்திலேயே பகவதாலயத்திற்குப் போவது தெரிகிறது. உப என்பதனால் நிவேதனம் முடிவான பகவதாராதனம் செய்தமை தோற்றுகிறது.

புரோஹிதராகிய வசிஷ்ட மாமுனிவர் புறப்பட்டுப்போன பினபு ராமன் ஸ்னானஞ் செய்து மனதை அடககி நிலைநிறுத்திக்கொணடு, நீணடழகிய கணகளுடன் விளங்குகிற பத்நியாகிய ஸீதையோடு கூட நாராயணனை உபாஸித்தான். அவன் அப்போது விதி தவறாமல் ஹவிஸ்ஸு (நெய்) நிறைந்த பாத்ரத்தை சிரஸில் தரித்துக் கொணடு, ("உபரிஷி தேவேப்யோதாரயதி" என்று வேதம் சொல்லும். அதாவது தேவர்களுக்கு தலைமேல் எடுத்து வைத்துககொண்டு ஹோமஞ்செய்ய வேணடும என்ற இதன்பொருள்) ஜ்வலித்து கொணடு இருககிறஅக்னியில் "தம்தேவதாநாம் பரமஞ்ச தைவதம்" என்கிற ஸ்ருதியின்படி மஹிமை பொருந்திய தெய்வமாகிய நாராயணனுக்காக நெய்யைக் கொண்டு ஹோமஞ் செய்தான். அநுனம் ஹோமஞ் செய்த பின்பு மிகுந்த ஹவிஸ்ஸை மிகவும் இனிதாகப் புசித்து தனது இஷ்டம் நிறைவேறும்படி வேண்டிக கொண்டு தேவனாகிய நாராயணனை த்யானஞ் செய்து கொண்டே தானாகப் பரப்பின தர்பப் படுக்கையின் மீது மௌனத்துடன் மனதை நிலை நிறுத்திக் கொணடு ஸீதையுடனே அழகிய அவ் விஷ்ணு தேவாலயத்தில் அந்த ராஜகுமாரன் பள்ளிகொண்டான்.

இவ்விடத்தில் மூல ஸ்லோகம் :

வாக்யதஸ ஸஹ வைதேஹ்யா பூத்வா
நியத மாநஸ :
ஸ்ரீமத் யாயதநே விஷ்ணோஸ் ஸிஸயே
நரவாத்மஜ :
1–4

(விஷ்ணோராய-தநம் – விஷ்ணுவின கோயில்)

(b) யுத்தகாண்டம்

ஸ்ரீ ராமனுடைய பட்டாபிஷேகம் முடிந்த பினபு ஜாம்பவான், ஸுக்ரிவன், அஙகதன், ஆஞ்சநேயன், விபீஷணன் மற்றும் எல்லோரும் ஸ்ரீ ராகவனிடத்திலும், சீதாதேவியிடத்தி

தெரிந்து கொள்ளுங்கள் :

## ஏழு குணங்கள்

சூரியனின் குதிரைகள் ஏழு. புத்தியின் குணங்களும் ஏழாகும். அவையாவன :-

1. புது விஷயங்களை அறியும் ஆவல்.
2. கேட்டல்.
3. கொள்ளல்.
4. நிலை நிறுத்தல்.
5. பொருள்களின் கூறுபாட்டை அறிதல்.
6. பொருள்களின் உணமையைப் பற்றுதல்.
7. தத்துவத்தை தீர்மானமாக அறிதல்.

இந்திரனுடைய குதிரையின் நிறம் பச்சை.

## காம்பீர்யம்

அச்சம், வருத்தம், மகிழ்ச்சி முதலியவற்றால் மாறுபாடாத மன நிலையை 'காம்பீர்யம்' என்பார்கள்.

## வெற்றியின் இரகசியம்

அரசர்களுக்கு மூன்று வகை சக்திகள் தேவை. அவை ப்ரபு சக்தி, மந்த்ர சக்தி, உத்ஸாக சக்தி ஆகியவையாகும்.

செல்வத்தினாலும், பெரும் படையினாலும் அரசர்க்கு உண்டாகும் பலம் பிரபு சக்தி.

மதியூகமுள்ள நல்ல மந்திரிகளின் நல் ஆலோசனையினால் உண்டாகும் பலம் மந்த்ர சக்தியாகும்.

அரசருடைய சரீர பலம், மனோ பலம், உத்ஸாகம், வெல்ல வேண்டும் என்ற எண்ணம் இவைகளின் தொகுதி தான் உத்ஸாக சக்தி.

## அரசர்க்கு நான்கு வித்தைகள்

தருக்க சாஸ்திரம், வேதங்கள் (ருக், யஜுர், ஸாம, அதர்வண வேதங்கள்) விவசாயம் (வியாபாரம்) மற்றும் ராஜநீதி என்பன.

## வந்திகள்

அரண்மனையில் தினந்தோறும் குறிப்பிட்ட காலங்களில் அரசனின் புகழைப் பாடுவதற்காக நியமிக்கப்பட்டிருந்தவர்கள்.

ஆதாரம் :- ரகுவம்ஸ காவ்யம்

—க. ராமலிங்கம், புதுப்பேட்டை.

லும் விடைபெற்றுக்கொண்டு அவ விருவராலும் மரியாதை செய்யப பட்டு விடைபெற்றதை 128-வது ஸர்கம் குறிப்பிடுகிறது.

பெருமாளை தாம ஆராதித்து வரு வதும் தமது முன்னோர்களால ஆரா திக்கப்பட்டவருமான ஸ்ரீ ரங்கநா தனை பரணவாகார விமானத்துடன கூட சன்மானமாக தருகிறார். அவ விமானத்தை விபீஷணன கொண்டு செல்வதைப் படம் பிடித்துக் காட்டு கிறது 87வது ஸ்லோகம்.

''விபீஷணோபி தர்மாதமா ஸஹ
... ..... ........
லப்த்வா குல தனம ராஜா லஙகாம்
ப்ராயாத ... மஹாயசா:

இதனை நிரூபிப்பதைபோல ஸ்ரீரங்கம் கோயில் தூணில் விபீஷணன ஸ்ரீரங்க விமானத்தை கையினில் ஏந்திவரும சிற்பம் அமைந்துள்ளது.

(C) உத்தரகாண்டம்:

இந்த உத்தரகாண்டத்தில் 108வது ஸர்க்கத்தில் பெருமாளின் (ஸ்ரீ ராம னின்) வைகுண்ட ஆரோஹணத்தை விவரிக்கின்றார் ரிஷி வாலமீகி. இதோ அந்த ச்லோகங்கள்!

''விபீஷணமதோ வாச ராக்ஷஸேந்
த்ரம மஹா யசா:
யாவத பரஜா தரிஷ்யநதி தாவத
த்வம் வை விபீஷண:''

''ராக்ஷஸேநதிர மஹா வீர்ய லஙகா
ஸத: தவம தரிஷயஸி
யாவத் சந்த்ரஸச சூர்யஸச யாவத்
திஷடதி மேதிநீ
யாவஸ்ச மத கதா லோகே தாவத்
ராஜயம தவாஸதவிஹ ||
சாஸித ஸச ஸகித்வேந காரயம் தே
மம சாஸனம்
ப்ரஜா: ஸமரக்ஷ தர்மேண நோத
தரம் வக்துமர்ஹஸி ||
கிஞ்சாநய த்வக்து மிசசாம ராக்ஷ
ஸேநதிர மஹாமதே
ஆராதய ஜகநநாதம இக்ஷ்வாகு
குல தைவதம
ஆராதன மநிஸம் தேவைரபி ஸ
வாசவை:
ததேதி பரதி ஜக்ராஹ ராம வாக்யம
விபீஷண:''

(இதன் பொருள்: 'இவ்வுலகில் மக்கள இருக்கும் வரையிலும, சூரிய சநதிரர்கள் இருக்கும் வரையிலும், இநத பூமி உள்ள வரையிலும், என் சரிததிரம் வழங்குகின்ற வரையிலும் லங்கா புரியில் தர்மம் தவறாமல் ராஜ்ய பரிபாலனம் செய்து வருவா யாக. நீ என தோழன் என்கிற கார ணத்தால் இவ்வாறு கூறுகிறேன் இதை தவறாகக் கூடாது. இக்ஷ்வாகு வம்ச அரசாகளால பக்தியுடன பூஜிக்கப் பட்டு வந்த தெய்வத்தை உனக்குக் கொடுததிருக்கிறேன. இது சகல தேவாகளாலும ஆராதிககப்பட்டது. நீ இதை குல தனமாக பாவித்துக் கொண்டு வழிபட்டு வருவாயாக!' என்று சொலல ஸ்ரீ ராமனுடைய ஆணையை சிரஸாவஹித்துக கொண்டு ஏற்றுக்கொண்டான்)

முடிவுரை:

1. அயோத்யா காணடம் ஸர்கம் 6ல் விஷ்ணுவின் ஆலயத்தில் பத்னி யோடு கூட ஸ்ரீ ராமன் ரங்கநாத னையே பூஜித்தான் என்று இருப்ப தாலும் 2. யுத்தகாணடத்தில் விபீ ஷணனுக்கு தன குல தெய்வமும் இஷ்ட தெய்வமுமான ஸ்ரீ ரங்க நாதனை ஸ்ரீ ராமன் விபீஷணனுக்கு கொடுத்ததை ''லப்த்வா குல தனம்'' என்று ரிஷி கூறியுள்ளதாலும், 3. உத் தர காணடம் 108 வது ஸர்க்கத்தில் ''ஆராதய ஜகந்நாதம் இக்ஷ்வாகு குல தைவதம்'' என்று ரிஷி வெளிப்படை யாக ரங்கநாதனையே இக்ஷ்வாகு குல தெய்வமாக ரிஷி சொல்லி யுள்ளதாலும் ஸ்ரீ ராமா னந்தஸாகரின ராமாயணத் தொடரில் ''இராமர் இலிங்க பூசை'' செய்ததாக சித்தரிப்பத கு அவருடைய சிவாபிமானம்தான் கார ணம் என்பதோடல்லாமல் வால்மீகி திருவுள்ளததிற்கு மிகவும் விரோத மான செயல் என்பது வெளிப்படை.

அடுதத தொடர் கட்டுரையில் (2) பகவான் துளஸிதாஸின் ''ராம சரித மானஸி'' ல் இந்த ''லிங்க பூசைக்கு'' ஆதாரம் உண்டா என்பது ஆராயப் படும்.



## விண்ணப்பம்

'ஸப்தகிரி' மாத இதழுக்கான தொகையை 'மணியார்டர்' மூல மாக அனுப்புதல் பயனுள்ளதாக அமையும். மணியார்டர் கூப்பனில் தஙகள் முகவரியினை ஆங்கிலத்தில்எழுதுவதும், பழைய சந்தாதாரராக இருந்தால் தங்கள் சரியான சந்தா எண்ணை மறக்காமல் குறிப்பதுவும் 'ஸப்தகிரி' நிருவாகப்பணியினை எளிதாக அமைக்கும். தொகை அனுப்பியும் இதழ் பெறாதவர்கள், தாங்கள் எழுதும் புகார்க் கடிதத் தில் மணியாடர் எண,செய்த தொகை, அனுப்பிய தேதி ஆகிய விவரங் களுடன தங்கள் முழு முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொண் டால விரைவில செயலாறற உதவும். சந்தாதாரர்களின் முழு ஒத் துழைப்பையும எதிாபார்க்கிறோம்.

— ஆசிரியர்.

# திருமங்கை ஆழ்வாரும் சுந்தரமூர்த்தி நாயனாரும்

திருமங்கை ஆழ்வார் நம்மாழ்வரைப் போன்று ஆயிரத்திற்கு மேற்பட்ட பாசுரங்களைப் பாடியவர்; எம்பெருமானின் எண்ணிறந்த திறத்தையெல்லாம் இனிதாக இசைத்தவர். அருளாளன் பெருமையை அருமையாகக் கூறியவர். களிப்பருளும் கருணாமூர்த்தியைத் தெளிவாக விளம்பியவர்.

இவர் பாசுரங்கள் உவப்பை ஊட்டவல்லன; உள்ளத்தைக் கொள்ளை கொள்வன; கருத்தும் பொருளும் ஒருமித்துச் சொல்லும் செய்தியினை வெல்லம்போல் சுவைபடச் செப்பும் திறத்தன; யாப்பு நலனும், இசையின்பமும் வசப்படுத்தும் பெற்றியுடையன; புலவர் பெருமக்கள் இவர்தம் புலமைத் தகுதியையும் பக்திப் பரவசத்தையும் மிக்கவே விழைந்து கூறுவார்கள்.

இத்தகைய பக்தியுள்ளம் படைத்த அருட்கவிவாணரான இவர், திருவேங்கடத்தில் கோயில் கொண்டிருக்கும் பெருமாயனை மனம் உருகிப் பாடிப் பரவுகின்றார். பேராற்றல் படைத்த அந்த ஆராவமுதனை நோக்கி, 'ஐயனே! நீ எனக்கு முன்பு வெகு தொலைவிலிருந்தாய்; பின்னர் அடியேன் மறவாமல் போற்றி வணங்கியதால், இன்று நீ! என்னருகில் இருப்பவனாகிவிட்டாய்; மேலும் நினைநது நினைநது துதிச் செய்து வநததால் நீ! என சிந்தையில் நின்று விந்தை புரியக் காணகின்றேன். நீ! மாமாயனானதால் மறைந்து எங்கும் நிறைந்து அருள் புரிகின்றாய்! உன் மாயத திறததினை யார் தான் வாயால் கூறி விளக்க இயலும்; பாடிப் பரவிடுவார் மனத்தில் பரவசம் கொண்டு பாங்குறத் திகழ்கின்றாய்! கணுககளையுடைய மூங்கில்கள் பிளவுபட்டு ஒளி போன்ற முத்துகளையும் மின்னுகின்ற இரத்தினங்களையும் உதிர்ககின்ற திருவேங்கடம் எனனும் திருமலை மேலே நீ எழுநதருளி அழகொளி செய்கின்றாய்! நீ யார்? நீ தான் ஆயன்! ஆம் நீயே கணணன்! உன்னுடைய பொன்னார் திருவடிகளைத தவிர அடியேன வேறொன்றையையும் போற்றுதல் அறியேன்! நபபின்னைப் பிராட்டியாருடன் சேர்ந்து வந்தே என்னெஞ்சில் புகுந்த உனனை உன் அருமைத் திருவடிகளைத் தவிர வேறெதையும், விரும்பிப் போற்றுபவன அலலேன்!' என்று தாம கொண்ட உள்ளத்தின் உறுதிப் பாட்டினைத் திருமங்கை ஆழ்வார் தெரிவிக்கின்றார்.

எம்பெருமான் யாருக்குத் தூரத்திலிருப்பவனாகி விடுகினறான்? அவனைப் போற்றாதவர்க்குத் தூரத்திலிருப்பவனாகி விடுகின்றான்; அவன் சீர்மையினை உவந்து பண்ணிசைப் பவர்களுககு அருகில் வந்து அருள் சுரப்பவனாகி விடுகின்றான்.

கருணை முகிலான கார்முகில் வண்ணன், வாடும் பயிரை வாழ்விக்கும் மழை போல விரும்பும் அன்பர்க்கு அருள்புரிந்து அகமகிழ் வெய்தி நிற்பான், எண்ணுபவர்கள் எண்ணத்தில இருந்து களிநடம் புரிவான், சுயநலப் போக்கால் கண்ண பிரானை வெறுத்தவன் துரியோதனன். எண்ணிப் போறறாத அவன பாரதப் போர்கள மணணில் பூண டோடு ஒழிந்தான. கண்ணனுககுத் தூரத்தனாகிய அவன் மணணில இழிநது மடிந்தான். எணணி நமபித் துதித்த பாண்டவர்களுககுக் கண்ணன் அருகில் சென்று விருமபி உதவி செய்து, பாரதப போரில் வெற்றியினால் பெற்றியுறச் செய்தான். கணணபிரானை எண்ணாதவர்களுக்கு தூரத்தனாய் விலகியும், எணணிப் போற்றுபவர்களுககு அன்பனாய், நெஞ்சில் சார்நதும் இருப்பான் என்ற செய்தியினை,

> "சேயன் அணியன் என்சிந்தையுள்
> நின்ற
> மாயன் மணிவாள் ஒண்வெண்
> தரளங்கள்
> வேய்விண்டு உதிர்வேங் கடமா
> மலைமேய
> ஆயன் அடியல்லது மற்று
> அறியேனே!"

எனப் பாடுவார் திருமஙகை ஆழ்வார். இவரைப் போன்று சுந்தரமூர்த்தி நாயனாரும் சுகம் தரும் தூய நெறி தரும் சிவபெருமானை உள்ளம் உவந்து பாடுவார். திருக்காளத்தியில் பெருமையாகக் கோயில் கொண்டுள்ள அருளாளனை உருகிப் பாடுகின்றார்.

'காளத்தி ஐயனே! உன் பெற்றியினை உற்றுணந்து அறியும் திறனற்று இருந்தேன்.

ஆதலால், தீய வழியில் சென்று உழன்றேன். பிறர் என்னைக் கடிந்து பேசுகின்ற அளவில் தவறான போக்கில் இடாப்பட்டேன். செருக்குற்றுத் தருக்கித திரிந்தேன். உன் பால் நான் அன்பு கொள்ளாததால் இத்தவறான இழிச் செயலில் தலைப்பட்டிருந்தேன்; தவறு செய்து வநதேன். இப்படிப்பட்ட தப்பான போககிலிருந்த என் மனத்தில் ஒப்பிலா அப்பனாகிய நீ வந்து புகுந்திட்டாய்; நீயே வந்து புகுந்ததால் சேயேனாகிய அடியேன் உன்னை அறிய முடிநதது. குளிர்ச்சி பொருந்திய சடைமுடியை உடையவனே! நீ மிகு எழில் காட்டும் இளமையுடையவனாயுள்ளாய்!

திரு. வி. உலகநாதன்,
சென்னை.

'வானவர்கள் மகிழ்ந்து தம் முடியால் உன் திருவடியை வணங்குதற்குரியவனாய் உயர்ந்திலங்குகின்றாய்; பிறவி மயக்கத்தை நீக்கிப் பெரும் பதம் அருளுகின்ற பெம்மானே உன்னையல்லால் மற்றொன்றையும் என் சிந்தையால் எண்ணாதவனாகிய யான், பண்ணிசைத்து உள்உருகப் பாடிப் பரவுவேன்' என்றவர்,

"கடியேன் காதன்மையால் கழல்போ
தறியாத என்னுள
குடியாக் கோயில் கொண்ட குளிர்
வார் சடையெம குழகா
முடியால் வானவாகள் முயங்கும்
திருக்கா ளத்தியாய்
அடியேன உனனையலலால் அறி
யேன் மற்றொரு வரையே!

என்று இசைத்து இதயங் குளிர்கின்றார். இவ்வாறு திருமங்கை ஆழ்வாரும் சுந்தரமூர்த்தி நாயனாரும் பாடிய பாடல்களில் கருத்தொற்றுமை இருத்தலைக் காணலாம். திருமங்கை ஆழ்வார், திருமாலை நோக்கி என் சிந்தையுள் நின்ற மாயன் என்றார்; அம்மாயனே திருவேங்கட மாமலைமேல் நின்ற ஆயன் என்று வாய் மணக்கப்பாடுவார். அந்த ஆயனான கண்ண பெருமானுடைய திருவடிகளையன்றி வேறொன்றையும் அறியேனே என்றார்.

சுந்தரமூர்த்தி நாயனாா சிவபெருமானை என் சிந்தையுள் கோயில் கொண்ட குழகன் என்றார். அக்குழகனே காளத்தி என்னும் பதியில் வதியும் குளிர்வாா சடையன் என்று உள்ளம் உவக்கப் பாடுவார். அந்தச் சிந்தைக்கினிய சடையனையன்றி மற்றொரு வரை அறியேனே என்றார். இவ்வாறு பாடிய இருவர் கருத்தும் ஒருமித்து இருத்தலைக் காணலாம். இவர்கள் இருவரும் பாடிய பரம்பொருள் திருமாலாக சிவனாக இருந்தாலும் உள்ளம் உவந்து அவர்கள் வெளிப்படுத்திய கருத்துகள் ஒருமை கொண்டிருத்தலை யறியலாம். சர்க்கரையால் செய்யப்பட்ட பொருள்கள வெவ்வேறாக இருந்தாலும் எடுத்துச் சுவைக்கின்றபோது அவை யாவும் சர்க்கரையின் இனிப்பைத் தருதல் போல இவர்கள் பார்வையில் தோன்றிய இறைவன் இரு வேறு தன்மையில் இருந்தாலும் விரும்பி இசைத்தப் பாடல்களின கருத்துக்கள் ஒருமித்து ஒருவனே இறைவன் என்று நமக்குப் புலப்படுத்தக காணலாம்.

இப்பெரு மக்கள் இருவரும் பரம பொருளைத் தவிர மற்றொன்றையும் அறியாதவர்கள் ஆவார்கள். பார்க்கும் இடமெல்லாம் நீக்கமற நிற்கும் இறைவனைத தவிர மறந்தும் வேறெதையும் நினையாத நெஞ்சத்தைப் படைத்த திண்மையாளர்கள்.

"தெய்வம் தெளிமின்" என்றுகூறி நெறியில் ஊன்றி நின்று தெளிவு பெற்றவர்கள். எம்பெருமானை அறியும் அறிவே தெளிவு பெற்றதாகும். ஆம் ஒளி மயமான தன்மையில் விளங்கும் பரம்பொருளை எண்ணிப் போற்றுபவரே தெளிவுடையவர். ஆதலால் இவ்விருவரும் செவ்வியுடையதம் மனத்தால் திவ்வியப் பொருளான தெய்வத்தைத் தெளிந்தார்கள்.

தெளிந்த சிந்தையுடைய இவர்கள் இருவரும் இறைவனைத் தவிர, பிறிதொன்றையும அறியோம் என்றார்கள். இசைத்து இவர்கள் பாடிய பாடலில் 'மற்றொன்றறியேன்' என்ற தொடர்மொழியால் தம் கடமையுணர்ச்சியினை வெளியிட்டார்கள். இப்படி ஒப்பின்றி இப்பாரிலுள்ள உயிர்க் குலத்திற்குத் தப்பாத உதவி செய்யும இறைவனைப் பற்றி இவர்கள் கூறியதால், நாமும் நம் வாழ்வில் சேமமுற ஆயிரம் திருநாமம் பெற்றிலங்கும் அருளாளனையன்றி வேறொன்றையும் எண்ணாமலிருத்தல் பெருமை தருமன்றோ? மண்ணில் புகழ் அடையலாமன்றோ?

அதள சுதள, பாதாளம் என்கின்ற மண்ணுலகம் ஏழும் என்றும் வற்றாமல் இருக்கின்ற கடல் ஏழும், அசையாமல் ஆடாமல் இருககின்ற மலை ஏழும், உள்ளன. இவற்றை உண்ணும் பொருளாகக் கருதியவன் கருணை முகில் வண்ணன். அவற்றை அன்று உணடவன் அவன். இந்தச் செய்தியை அறிநதவா திருமங்கையாழ்வார்-ஆதலால் அப்பெருமானிடம், முன்பு இவற்றை உன் திருவாயால் உணடா யல்லவா? என்று பரகாலர் கேட்கின்றார்.

'இவற்றை உண்ணும் ஆற்றல் பெற்ற நீ! தொன்மைப் புகழோடு திகழ்கின்றாய்! எளியனான யானோ! நிராதரவாய் எவருடைய உதவியுமின்றித் துயர்படுகின்றேன்; பெருந்துயர் அடைந்தாலும், யான் வேறு கதியின்றி, விருப்பமுடன் திருநறையூரில் பெருமையுற்றுப் பிறங்கும் உன்னையே உதவி புரிய கூவி அழைக்கின்றேன். ஆவல் கொணடு உன்னைக் கூவி யழைக்கும் அடியேன் உன்பால் மிகப்பற்றுடையேனாக உள்ளேன்.

பற்றற்றவனாகிய உன் பற்றைப் பெற்ற எனக்கு அருள் சுரந்து நலம் செய்வாயாக! சந்ததமும் எந்தையாயுள்ள எம்பெருமானே என் சிந்தையால் பந்தமுறப்பக்தி செய்கின்றேன்' என்ற திருமங்கையாழ்வார்,

வற்றா முதுநீ ரோடு மால்வரை ஏழும்
துற்றா முன்துற்றிய தொல்புக
ழோனே
அறறேன் அடியேன் உன்னையே
அழைக்கின்றேன்
பெற்றேன் அருள்தந்திடுக என்
எந்தைபிரானே!

என்று பாடி அன்பனான இன்ன முதனை ஏத்துகின்றார். ஆதரவற்றவர்கள் எங்கெங்கு இருக்கின்றார்களோ அங்கெல்லாம் அவர்களைத் தேடிச் சென்று இன்பம் பொழிகின்றாய். இப்படித் தப்பாது அருள் நல்கும் உன்னை அனாத ரட்சகன் என்று அறிந்தவர்கள் தெரிவிக்கின்றார்கள். எனவே, ஆதரவற்ற அடியேன் காதலால் உன்னைக் கூவி

## ராஜ்யத்தின் ஏழு அங்கங்கள்

ஒரு ராஜ்யத்தின் ஏழு அஙகங்களாவன

அரசன், மந்திரி, அரசனது நணபாகள். பொக்கிஷம,நாடு, அரண மற்றும சேனை ஆகியவைதான்.

நெருப்பு, ஜலம், வியாதி, பஞ்சம, சாவு ஆகியவை தெய்வக் கோபத்தினால் வரும் தீங்குகள்.

ஜனங்களுக்கு கஷ்டமளிப்பவர்கள் :

திருடர்கள், சத்ருக்கள், அரசாங்க உத்தியோகஸ்தர்கள், பேராசை பிடித்த அரசன.

தகவல் : க. இராமலிங்கம்
ஆதாரம். இரகுவம்ஸ காவ்யம்.

அழைக்கின்றேன். திருவருள் புரி வாயாக!' அப்பெருமானிடம் 'நீ தானே என் தநதை; ஆம் நீ தானே அனைத்தையும் காக்கும் பிரான்' எனக்கூறி இறைஞ்சுகின்றார். இறைஞ்சி நிறைவை எய்த ஏத்து கின்றார்.

இவரைப் போன்றே இப்புவியில் நலங்காண சுந்தரமூர்த்தி நாயனாரும் சிவபெருமானிடம், 'எம்பெருமானே! உனனை எப்போதும் எக்காரணத் தாலும் எந்நிலையாலும் மறவாத வனாயிருப்பேன். நான் எடுக்கின்ற ஏழ்பிறவிக்கும் நீ தான வாழ்வளிக் கும் வள்ளலாக, உதவி புரிவோனாக உள்ளாய் என்று மனத்தால நினைநது போற்றி வருகின்றேன்.

புற்றிலிருந்து வெளி வந்து பட மெடுத்து ஆடும் நாகங்கள் பல வற்றை உடைய, ஒளி மிகுந்த ஊரான அவிநாசியில் பற்றாக வாழ் கின்ற, பயனை அருள்கின்ற பதியே! மேலான தலைவனே!' என்று போற்றி அகம் குளிரப் புகழ்ந்தவர்,

எற்றான் மறக்கேன எழுமைக்கும்
எம்பெருமானையே
உற்றாய் எனறு உன்னையே உள்
கின்றேன உணர்ந்து உள்ளத்தால
புறறாடு அரவா புக்கொளியூர் அவி
நாசியே!
பற்றாக வாழ்வேன பசுபதியே
பரமேட்டியே

எனப் பாடி இறைஞ்சுகின்றார். எம் பெருமானை நோக்கி 'நீ அனைத்திற் கும் ஆதாரமானவன். நான உன் னைத்தவிர எவரையும், எவற்றையும் ஆதாரமாகஎண்ணாதவன். ஆம்எவற் றிற்கும் உவப்பூட்டுபவன நீ! யான ஏழு பிறவி எடுத்தாலும் வழுவின்றி விழைந்துன்னையே போற்றுபவன்; நினைக்கின்ற மனத்தால் உணர்ந்து, அந்த மனத்தால் உன்னையே வந்திக் கின்றேன. புவியில் சிறந்த பதியான அவிநாசியில் கோயில் கொண்ட குணாளனே! உன்னையே பற்றாகப் பரவுகின்றேன். பசுபதியே! பரமேட் டியே கரம் கொடுத்து என்னை அர வணைத்துக் கொள்வாயாக!' என்று சுநதரமூர்த்தி நாயனார் ஆவல் மேவி சிவபெருமானை வேண்டுகின் றார். அற்றது பற்றெனில் உற்றது வீடு என்று நமமாழ்வாா கூறியபடி இவரும் பிறபற்றைத் துறந்து உன்னையே பற்றாக வாழ்வேன் என்றார்.

திருமங்கை ஆழ்வார் பாசுரத்தில் மூன்றாம் அடியில் நான் திக்கற்ற வனாகிவிட்டேன்; எனக்குக் கதி வேறு யாருமில்லை; ஆதலால் உன்னைப் பாடி அழைக்கின்றேன்; நீ என்னை மறந்துவிடாதே. உள்ளு வக்க, நாவிழைய பரவும் யான் உன்னை வேண்டுகின்றேன். எனவே நீ உன்னருளைத் தந்திடுக! என்று இன்புற்றுக் கூறிய செய்தியினை,

" அறறேன் அடியேன் உனனை
அழைக்கின்றேன்"

என்று பாடுவார். நான்காம் அடியில்

" பெற்றேன் அருள் தந்திடுக என்
எந்தை பிரானே"

என்று தநதையாகிய எம்பெருமானி டம் அருள வேண்டுகின்றார்.

சுந்தரமூர்ததி நாயனாா தம் பாட லில இரண்டாம் அடியில் எனக்கு வேறெவரும் கதியில்லாமையால் உன்னையே உரியவன் என்று போற்று கின்றேன்; ஆம் என்னுள்ளத்தால் உணர்ந்து, நெகிழ்ந்து உருகிப்பாடு கின்றேன் என்ற அவர்,

" உற்றாய் என்றுன்னையே உள்கு
கின்றேன் உணர்ந்து உள்ளத்தால்"

எனப் பாடி வேண்டுகின்றார். நான் காம் அடியில் உன்னருள் கிட்டப் பெற்றால் உனக்கே பற்றுடையவனா யிருப்பேன என்பதனை,

" பறறாக வாழ்வேன் பசுபதியே"

என்று இன்பமுறப் பாடுகினறார்.

இதுவரை வரைந்து காட்டியதில் திருமங்கையாழ்வாரும் சு ந் த ர மூர்த்தி நாயனாரும் பாடிய பரம் பொருள்களாகிய மூர்த்திகள் வெவ் வேறாக இருந்தாலும் அவர்கள் எடுத்தாண்ட கருத்துகள் ஒன்றா யிருத்தலை அறியலாம்.

இவர்கள் பாடியருளிய பாடல் களில் போற்றிக் கூறிய பரம்பொருள் களின் உருவ நிலையைத் தெரிவிக் காமல், செய்த வினைகளை-நற் செயல்களை மட்டும் பெய்து பாடி, இறைவன் ஒருவனே என்ற நெறியில் நின்று இசைத்துள்ளார்கள்.

" வேற்றுமையாய்க் காண்பவர்க்கு
வேறாய் வடிவமெய்தி
மாற்றமுடன் நின்றிடுவான் மாய
பிரான்—ஏற்றவனை
ஒன்றென்றே போறறி உணர்ந்து
துதிப்பவர்முன்
ஒன்றாகி நிற்பான உவந்து!

எனறு கவியமுதன் பாடியவாறு, மேற் குறித்தவர்களின பாடல்களை வேற் றுமையின்றி நாம் பாடினால் எம் பெருமான் வந்து அனபாக இன்பம் பொழிவான். எனவே ஆழ்வார்கள் நெறியை நாயன் மார்கள் நெறி யைப் பெருயைளிக்கும் ஒரே நெறி எனப் போற்றி உய்வோமாக! ★

# திருமலையில் தங்கு வசதிகளுக்கான நன்கொடைத் திட்டம்

கலியுக வைகுண்டமெனக் கருதப்படும் திருமலையில் நின்றவண்ணம் அருள் புரியும் வேங்கட வனைக் காண நாட்டின் பல முனைகளிலிருந்து ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் திருமலைக்கு நாள்தோறும் வருகை புரிகின்றனர். அவர்கள் திருமலையில தங்குவதற்கென்று திருமலை திருப்பதி தேவஸ்தானம் பல தர்ம சத்திரங்களையும், குடில்கள், விருந்தினர் விடுதிகள் போன்ற பல தங்கு வசதி கட்டிடங்களையும் கட்டியுள்ளது. வருகை புரியும் யாத்திரிகர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருவதை மனதிற்கொண்டு மேலும் தற்போது உள்ள விருந்தினர் விடுதி, குடில்களின் மேல் பொதுமக்களின் நன் கொடைத் திட்டததின் கீழ் மற்றுமொரு தளத்தினைக் கட்டுவதென்று மேலாண்மை முடிவெடுத்துள்ளது. யாத்திரிகர்/பக்தர்களுக்குத் தொணடு புரிந்திடும் ஓர் அரிய வாய்ப்பாக இரக்கமனமிக்க பொதுமக்கள் அல்லது தனியார் நிறுவனம் அல்லது அறக்குழு ஆகியன இத்திட்டத்தினைப் பயன்படுத்திக்கொள்ளும் என நம்புகிறோம்.

## முதல் தளம் :

ஆழ்வார் ஏரி, மங்களபாவி, சங்குமிட்டா, சேஷாத்ரிநகர், அஞ்சநாத்ரி, கருடாத்ரிநகா ஆகிய காட்டேஜ்களின் ஏ மற்றும் பி பகுதிகளின் மேல்கட்டப்பட்டு வரும் 'சி' மற்றும் 'டி' பகுதிகள். 872 முதல் 1012 சதுர அடி பரப்புள்ளதாக இப்பகுதிகள் அமையும். இவ்வொரு பகுதிக்கும் வழங்கவேண்டிய நன் கொடைத்தொகை ரூ. 1. 50 இலட்சமாகும்.

## ராம் பகீச்சா விருந்தினர் விடுதிகள் :

ஒவ்வொரு தளத்திலும் 50 அறைத்தொகுதிகள் வீதம் மூன்று தளங்களைக்கொண்ட மூன்று விருந் தினர் விடுதிகள் கட்டப்பட்டு வருகின்றன. இவற்றில் 166 அறைத்தொகுதிகள் நன்கொடையாளர் களுக்கு ஒதுக்கப்பட்டுவிட்டன. 44.5 சதுர மீட்டர் பரப்புள்ள இவ்அறைத்தொகுதிக்கான நன்கொடை தொகை ரூ. 60,000 ஆகும்.

## ஸப்தகிரி சத்திரங்கள :

இச்சத்திரக்கட்டிடம் 9 தொகுதியினைக் கொண்ட 954 அறைகளுடன் விளங்கும். இவற்றில் 943 அறைகள் நன்கொடைத் திட்டத்தின் கீழ் ஒதுக்கப்படும். 1×12'4' அளவில் இவ்வறைகள் விளங்கும். இவ்அறைக்கான நன்கொடைத் தொகை ரூ. 40,000 ஆகும்.

## 2-வது விருந்தினர் விடுதி :

சேஷாத்ரி நகரில் இரண்டாவது விருந்தினர் விடுதியில் உள்ள இரண்டு தளங்களில் கட்டப்பட் டுள்ள 26 அறைத் தொகுதிகள் நன்கொடைத் திட்டத்தின்கீழ் ஒதுக்கப்படும். 4.20 மீ × 4.20 மீ பரப்ப ளவில் இவ்வறைத் தொகுதிகள் விளங்கும். இவ் இரண்டாவது விருந்தினர் விடுதிக் கட்டிடத்திற்காக வோ அல்லது தளம் முழுமைக்கோ நன்கொடை பெற மேலாண்மை விழைகின்றது. விடுதி கட்டிடத்திற் கான நன்கொடைத் தொகை ரூ. 25 இலட்சமாகும்.

மேற்கூறிய இத்தங்கு வசதி கட்டிடஙகளுக்கான நன்கொடையினை தனிநபர்/தனியார் நிறுவனம் அறக்கட்டளை போனற எந்தப் பெயரிலும் வழங்கலாம்.

## சலுகைகள்

நன்கொடையாளர் அல்லது அவர் உறவினர்கள் அலலது நிறுவனத்தின அல்லது அறக்கட்டளை யைச் சார்ந்த உறுப்பினர்களோ அல்லது அவறறின் அலுவலர்களோ வருடததில் 60 நாட்களுக்கு, (ஒரு முறை தங்கிடும்போது 10 நாட்களுக்கு மிகாமல்) இலவசமாக அவர்கள் நன்கொடை அளிதத தஙகு வசதி களில் தங்கலாம். அவர்கள் நன்கொடை வழங்காத தங்கு வசதிகளில் தங்க நேரிடின், வித்யாசப்படும் வாடகைத்தொகை மட்டுமே அவர்களிடமிருநது வசூலிக்கப்படும்.

நன்கொடையாளர்களின் பெயர், முகவரி கொண்ட கற்பலகை ஒன்று முதல் தளம்/அறைத் தொகுதி/அறை ஆகியவற்றில் தகுந்த இடத்தில் பொருத்தப்படும். முழு விவரங்களுக்கு:

Executive Officer, T. T. Devasthanams, Tirupati - (A. P.) 517507. எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

தரும் பொருள் சிறியதே : பெறும் அருள் பெரிதே:

ஸ்ரீய:பதியான ஸர்வேச்வரனால் மயர்வற மதிநலமருளப் பெற்ற ஆழ்வார்கள் பதின்மர். அவர்களுள் மற்ற ஆழ்வார்களையெல்லாம் அவயவமாகக் கொண்டு தாம் அவயவியாய், தலைவராய், நாதராய் விளங்குபவர் நம்மாழ்வார். இவர் அவதரித்த நாளின் பெருமையும், மாதத்தின் பெருமையும் ஊரின் பெருமையும், அவர் அருளிய திருவாய் மொழியின் பெருமையும் பெரிது.

நம்மாழ்வார் கலி தொடங்கி 43ம் நாள் வைகாசி விசாகத்தில் அவதரித்தார் என குருபரம்பராப்ரபாவம் முதலான நூல்கள் பகர்கின்றன. ஆழ்வார் ஆசார்யர்களுடைய வைபவம் பற்றி மணவாள மாமுனிகள் தாம் அருளிய உபதேச ரத்ன மாலையில் பரக்க அநுபவித்துள்ளார். அதில்,

# நாதன் அவதரித்த நாள்

"ஏரார் வைகாசி விசாகததினேற்றத்
தைப்
பாரோரறியப் பகாகினறேன-சீராரும்
வேதந்தமிழ் செய்த மெயயனெழில்
குருகை
நாதனவதரித்த நாள்"

என்று ஆழ்வார் அவதரித்த திருநாளைப் போற்றி உரைப்பர்.

வைகாசி மாதமானது ஏரார்ந் திருக்கிறதாம். ஏரார்நதிருப்பதாவது அழகு நிறைநதபடி. அதாவது வசந்த காலமாகையாலே புஷ்பங்கள் பூத்துக் குலுங்கும் அழகுடைய வைகாசி மாதம். மேலும் ஆழ்வார் அவதரித்த குருகையானது "கொத்தலர் பொழிலையும் குயில்கள் நிறைந்த பொழிலையும் உடைத்தாயிருக்குமாபோலே ஆய்த்து" என்று அநுபவிப்பர் பிள்ளைலோகம் சீயர். மாதத்திற்குச் சிறப்பு சொன்னாற்போலே திருநன்னாளான திருவிசாகத்திற்குச் சிறப்பு கூறும்போது, ஆழ்வார் அவதரிக்கையாலே உகந்தருளின நிலங்கள் (திவ்விய தேசஙகள்) எல்லாவற்றிலும் பாலும் பழமுமாக அமுது செய்யும் நாளாக இருக்குமாம். இப்படிப் பட்ட ஒரு நனனாளை 'பாரோர் அறியப் பகர்கின்றேன்' என்கிறார் மாமுனிகள். அதாவது எல்லோரும் ஆழ்வாருடைய அவதார நனனாளான வைகாசி திருவிசாகத்தை அறிந்து உய்யவேணும் என்பதே யாகும். இவ்வாறான ஏற்றமுடைய நன்னாளிலே அவதரித்த ஆழ்வார் செய்த அரிய செயல் யாதெனில், பெருமை நிறைந்த வேதங்களைத் தமிழ் மொழியில் அருளியதே ஆகும். அதாவது ஒரு மனிதனால் செய்யப் படாததாய், எக்குற்றமுமில்லாததாய், எப்போதும் நிலைத்திருப்பதான வேதம் என்ன, அதன் இரண்டாவது பகுதியில் சொல்லப்பட்ட திருமகள் கேள்வனான ஸர்வேச்வரனுடைய இயல்பு, அழகு, தனமை, குணங்கள் என்ன-இவற்றைப் பயில மிக்க முயற்சி தேவைப்படுவதால் எல்லோரும் கற்றுத் தெளிவது அரிது. அதனால் எல்லோரும் பயின்று உய்யும் பொருட்டு இனிய தமிழ் மொழியில் வேதத்தின் பொருளைத் திருவாய் மொழி மூலம் அறியச் செய்தார் ஆழ்வாா. அதனாலன்றோ ஆழ்வார் 'வேதம் தமிழ் செய்த மாறன' எனச் சிறப்பித்து அழைக்கப்பட்டார். 'எய்தறகரிய மறைகளை ஆயிரமின்றமிழால் செய்தற்குலகில் வருஞ் சடகோபன்' என்று திருவரங்கததமுதனாரும், 'வேறொன்றும் நானறியேன் வேதந்தமிழ் செய்த மாறன் சடகோபன' என்று மதுரகவிகளும் புகழ்ந்துரைத்தது இங்கு நினைதற்பாலதாகும். இவ்வாறு வேதத்தின் உணமைப் பொருளை ஆழ்வார் உரைத்த காரணம் பற்றி 'மெய்யன்' என்றும், ஆழ்வார் பிறந்த ஊரும் காரணமானது பற்றி 'எழில்குருகை நாதன்' என்றும் உரைப்பர் மாமுனிகள். ஊரின் சிறப்பைச் சொல்லும் போது, "அவ்வூரிலே ஆதிப்பிரான் ஆன ஆதிநாதனும் உண்டாயிருக்கவும் இவருடைய (ஆழ்வாருடைய) நாதத்வம் (தலைமை) ஆய்த்து நடந்து செல்லுகிறது" என்பர் சீயர். இப்படிப்பட்ட குருகை என்னும் ஊரானது குன்றம் போல் மணி மாடங்களும் மாடலர் பொழில்களும் சேர்த்தடங்களும் அழகுற அமையப் பெற்றதாக இருக்கிறதாம். மேலும் உலகுக்கு அணியான வகுளாபரணர் என்னும் நாதனான நம்மாழ்வார் அவதரிக்கையாலே வந்த ஏற்றமும் ஒரு சேரப் பெற்றது அவ்வூர். மேலும் இவர் அவதரித்த நாளின் ஏற்றத்தைச் சொல்லும்போது 'ஊரும் நாடும உலகமும் தம்மைப் போல் ஆக்க வல்லவர் அவதரித்த நாள்' என்பர்.

இத்தகைய வீறு பெற்ற ஆழ்வாரின் அவதாரப் பெருமையையும் அவர் அருளிச் செயல் பெருமையையும் மற்றும் ஒரு பாடலில அநுபவிக்கிறார் மாமுனிகள்:

"உண்டோ வைகாசி விசாகத்துக்
கொப்பொரு நாள்
உண்டோ சடகோபர்க்கொப்பொருவர்-
உண்டோ
திருவாய்மொழிக் கொப்பு தெனன
குருகைககுண்டோ
ஒரு பார் தனிலொக்குமூர்."

டாக்டா. மா. வரதராஜன்-திருபபதி.

# விண்ணப்பம்

திருப்பதியிலுள்ள திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் தங்கு வசதிகளுக்காக முன்கூட்டியே செய்து கொள்ளும் இட ஒதுக்கீடுகளுக்கான தொகையினை எம். ஓ. மூலம் அனுப்புதல் கூடாது. அத்தொகைக்கான வங்கி காசோலையை 'உதவி செயலாட்சித் தலைவர் (வரவேற்பு) தி. தி. தேவஸ்தானம், திருப்பதி' அல்லது 'செயலாட்சித் தலைவர், தி. தி. தேவஸ்தானம் திருப்பதி' எனும் பெயரில் எடுக்கப்பட்டு, வருகை புரியும் நாள், வரும் நபர்களின் எண்ணிக்கை ஆகியவை கொண்ட முழுத் தகவல்களுடன் கூடிய கடிதத்துடன் (ஆங்கிலத்தில்) அனுப்புதல் வேண்டும்.

செயலாட்சித் தலைவர்,
தி. தி. தேவஸ்தானம், திருப்பதி.

---

இப்பாடல் மூலம் திருவிசாகத்திற்கு ஒப்பான நாளும், அந்நாளில் அவதரித்த ஆழ்வாருக்கு ஒப்பானவரும், அவரருளிய திருவாய்மொழிக்கு ஒப்பான பிரபந்தமும், அவர் பிறந்த திருக்குருகூருக்கு ஒப்பான ஊரும் இல்லை என்பதை விவரித்து அநுபவிக்கிறார்.

பாட்டின் முதலடியால் எம்பெருமானையும் அவன் விபூதியையும் மங்களாசாசனம் பண்ண நம்மாழ்வார் அவதரித்த திருவிசாகத் திருநாளுக்கு ஒப்பான நாள் இல்லை என்கிறார். கண்ணன் பிறந்த நன்னாளை 'நீ பிறந்த திருநன்னாள்' என்று கொண்டாடுகிறார் பெரியாழ்வார். அந்நாளும் 'கருஷ்ண த்ருஷ்ணா தத்வ ஜந்மம்' எனகிற படியே கண்ணன் திறத்து ஆசையே ஒரு வடிவு கொண்டாற் போல ஆழ்வார் அவதரித்த திருவிசாகத்துக்கு ஒப்பாக மாட்டா. ஏனெனில் கிருஷ்ணாவதாரத்தில் அக்ரூரா, மாலாகாரர் முதலான சிலர் நன்மை பெற்றுப்போந்தனர். ஆனால் அங்குஅவனை கைவிட்டவர்களையும் அவனிடத்து ஆசையை உண்டு பண்ணும்படி திவ்வியப் பிரபந்தங்களை அருளிச் செய்யப் பிறந்தவர் பிறந்தது இத் திருநாளிலன்றோ!

இப்படி நாளின் ஏற்றத்தைச் சொன்னவர் அந்நாளில் பிறந்த நம்மாழ்வாருக்கு ஒப்பாவர் உண்டோ என்று இரண்டாவது அடியால் கூறுகிறார். அதாவது ஆழ்வார் பிறப்பே தொடங்கி பால் உணணுதல் முதலிய உலக மக்கள் இயல்புகளுள் ஒன்றுமின்றி, மாறாக 'சடம்' என்ற வாயுவை அடக்கியதால சடகோபா என்ற பெயர் பெற்றார். மிகுதியான ஞானம் நிறைந்தவராய், இவருடைய ஞானப் பெருமைகு ஒப்பானவர்களை எல்லா உலகிலும் தேடிப் பார்த்தாலும் 'ஓரொருவரைக் கேட்டோமோ!' என்னும்படியானவர் ஆழ்வார். மேலும் உண்ணும் சோறு, பருகும் நீர், தின்னும் வெற்றிலை ஆகியவற்றில் ஊன்றின ஸம்ஸாரிகளுக்கு ஆழ்வார் ஒப்பாக மாட்டார். நம்மாழ்வாரானவர் 'நாட்டாரோடு இயல் வொழிந்து நாராயணனை நண்ணியிருப்பவர்'. மேலும் உண்ணும் சோறு, பருகும் நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் என்றே இருப்பவர். இப்படிப்பட்ட தன்மையருக்கு நித்ய ஸூரிகளும் ஒப்பாக மாட்டார். ஏனெனில் நித்ய ஸூரிகள்வாழும் பரமபதமான 'தெளி விசும்பு திருநாடு' என்னும்படி அவர்கள் எப்போதும் எம்பெருமானை அநுபவிக்கப் பாங்காக இருக்கும் இவ்வுலகமானது 'விண்ணுலார் பெருமாற் கடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை' என்னும்படி அக்ஞானமான இருளைத் தரும் பரந்த உலகமாகையாலே எம்பெருமானை அநுபவிக்க மேட்டுமடையாயிருக்கும். இவ்வாறான உலகிலே பிறந்து எம்பெருமானையே நினைத்திருக்குமவர் ஆழ்வார் ஒருவரே. இம் மண்ணுலகிலும் அவ்விண்ணுலகிலும் தனக்கு ஒப்பாரில்லாமையை 'மாறுளதோ இம்மண்ணின் மிசை' என்றும் 'இனியாவர் நிகர் அகல் வானத்தே' என்றும் ஆழ்வார் தாமே அருளிச் செய்தது நினைதற்பாலதாகும்.

இப்படி உலகமனைத்துக்கும் தலைவராய் அனைவரும் கையெடுத்துக் கும்பிடும் மகாத்மாவான சடகோபருக்கும் அவர் அவதரித்த திருநட்சத்தித்திற்கும் ஒப்பிலலாவிடினும் அவருடைய வாக்கான திருவாய் மொழிக்கும் அவர் அவதரித்த தேசத்திற்கும் கூட ஒப்பில்லை என்பதை மூன்றாமடியால் விளக்குகிறார்.

வால்மீகி முதலான முனிவர்கள் தாங்கள் அநுட்டித்த தவத்தினுடைய சக்தியாலுண்டான அறிவாலே அறிய வேண்டுமவற்றைத் தெளிய

அறிந்து அவ்வறிவினால் மகிழ்ச்சி கொண்டவர்களாய் மேன்மேலும் சுலோகங்களைத் தொகுத்துச் சென்றார்கள். அப்படியல்லரே ஆழ்வார். 'திருமாலவன கவி'யான ஆழ்வார் திருமாலால் அருளப் பெற்ற ஞானமும் அவன் குணங்களை அநுபவித்ததால் உண்டான அளவற்ற பெரு மகிழ்ச்சியும் வலியச் சொல்லுவிக்கத் திருவாய் மொழி முதலான திவ்யப் பிரபந்தங்களைப் பாடினார். எனவே திவ்யப் பிரபந்தங்களுள் சாரமான திருவாய்மொழிக்கு ஒப்பு உண்டோ? 'இத்தை யொழிந்தவையெல்லாம் கடலோசையோபாதி (கடலோசை போலே) என்னக் கடவதிறே' என்பர் சீயர். மதுரகவிகளும் 'அருள்கொண்டு ஆயிரம் இன்தமிழ் பாடினான்'என்று ஆழ்வார் அருளாலே அவதரித்த திருவாய்மொழி ஒப்பற்று இருப்பதைக் கூறினார்.

கடைசி அடியாலே, ஆழ்வாருக்கு இவ்வுலகிலும் விண்ணுலகிலும் ஒருவரும் ஒப்பில்லாதவர் போலே அவர் அவதரித்த ஊருக்கு ஒப்பாவது ஒருருமில்லை என்கிறார். ஸம்ஸாரத்துக்கு ஆபரணமான ஆழ்வார் பிறந்த திருக்குருகூரானது, 'நல்லார் பலர் வாழுங்குருகூர்' என்றும், 'சயப்புகழார் பலர் வாழும் தடங்குருகூர்' என்றும் ஆழ்வாரே கொண்டாடும் படியாய் இருக்கிறதாம். இதுபற்றியே அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரும் 'ஆற்றில் துறையில் ஊரில் உள்ள வைஷம்யம் வாசாமகோசரம்' என்று ஆசார்ய இருதயத்தில் அருளியுள்ளார்... அதாவது ஆழ்வார் பிறந்த ஊரில் 'பவளநன் படர்க்கீச்சங்குறை பொருநல்' என்று சொல்லும்படி பவளம், சங்குகள் பிறக்கும் சிறந்த ஆறான தாம்ரபரணி இருக்கிறது. அதில் துறையோ மிகச் சிறந்த பொருநல் சங்கணி துறை. இப்படிப்பட்ட ஆறும் துறையும் உள்ள ஊரோ 'நல்லார் நவில் குருகூர்' என்று கொண்டாடப்பட்ட திருநகரி. இவ்வாறு ஆறு, துறை, ஊர் ஆகியவற்றின் பெருமை வாயால் சொல்லி முடியாது. முப்புரியூட்டும் இவ்வூரில் பிறந்த ஆழ்வார் பெருமையை அநுபவித்து பேறு பெறுவோமாக!

மேதினியில் வைகாசி விசாகத்தோன் வாழியே
வேதத்தைச் செந்தமிழால் விரித்துரைத்தான் வாழியே
ஆதிகுருவாய்ப் புவியில அவதரித்தான வாழியே
அனவரதம் சேனையார்கோன் அடிதொழுவோன் வாழியே
நாதனுக்கு நாலாயிரம உரைத்தான் வாழியே
நன்மதுரகவி வணங்கும் நாவீறன் வாழியே
மாதவன் பொற்பாதுகையாய் வளர்ந்தருளோன் வாழியே
மகிழ்மாறன் சடகோபன் வையகத்தில் வாழியே





திருப்புறம்பயம் திருக்கோயில்

# Tirumala Tirupati Devasthanams
# Tirupati.

## ACCOMMODATION AT TIRUMALA

The Tirumala Tirupati Devasthanams are doing their best to provide the maximum possible facilities to the pilgrims coming to Tirumala. There are several large choultries providing free unfurnished rooms for families to stay in reasonable comfort. Electricity and water are free

For free accommodation, the pilgrims may contact the Central Reception Office, near the bus stand Sheds as well as Dormitory Halls are also there for the pilgrims to take rest Paid accommodation will be provided at the Central Reception Office

For advance booking, please write to the Asst Executive Officer (Reception-I) T.T.D. Tirumala Hills 517 504 together with a Demand Draft or Money Order receipt for the requisite amount duly furnishing the information regarding number of persons, date on which required and the amount remitted at least 10 days in advance

Furnished accommodation is available for service charges per day as detailed below.

I Hill View half cottages, Sankumitta, Seshadri Nagar, Anjanadri Nagar, Garudadri Nagar Cottages.

| | |
|---|---|
| One Portion (without geyser) | Rs. 15/- |
| H V.D.C. Suites (each) with geyser | Rs. 25/- |
| H.V.C. Guest House Big Suite with geyser | Rs. 50/- |
| H.V.C Guest House Small Suite with geyser | Rs 25/- |

*Advance reservation shall be made for the above areas*

II. Mangalbavi Cottages, T B C III row etc,

| | |
|---|---|
| T.B. outside cottages with geyser | Rs 60/- |
| V.V.C. & M.B.C 31 & 26 | Rs 70/- |
| M B C with geyser | Rs 50/- |
| T.B., A.T.C Suites with geyser | Rs. 15/- |
| A.T.C. Ground, I Floor: 'A', 'B', 'C' and 'D' portions each | Rs. 30/- |

*Reservation for Arjitha Seva Grigasthas only*

III. Each Suite in S V Guest House and N G G House — Rs 50/-
No advance reservation

IV. 

| | |
|---|---|
| Travellers Bungalow inside cottages | Rs 70/- |
| Special type cottages | Rs. 100/- |
| H R G. Cottage | Rs. 250/- |

*No advance reservation, Allotment subject to the availability.*

V. 

| | |
|---|---|
| Modi Bhavan in Hill View Delux Cottage each Suite | Rs. 250/- |
| Srinikctan Guest House Each Suite | Rs. 250/- |
| Entire Guest House | Rs. 750/- |
| Indira Guest House - each suite | Rs. 250/- |
| Entire Guest House | Rs. 1,000/- |
| Balakuteeram - each suite | Rs 250/- |
| Entire Guest House | Rs 1,500/- |
| Sri Padmavathi Guest House Single suite | Rs 250/- |
| Master suites in 1st floor and ground floor-each suite | Rs. 750/- |
| Entire guest house | Rs 2,500/- |
| Gokulam Guest House A/C Each Suite | Rs. 500/- |
| Srinivasa Nilayam—Each suite | Rs 500/- |
| ,, Entire Guest House | Rs. 2,500/- |
| Vidya Sadan—Master Suite | Rs 750/- |
| Other each suite | Rs 500/- |
| Godavari Sadan—Each suite | Rs. 250/- |
| ,, Entire Guest House | Rs. 750/- |
| Gambel Guest House—Each suite | Rs. 250/- |
| Entire Guest House | Rs. 1,000/- |

IV. Marriage Halls

| | |
|---|---|
| Sankumitta cottages East No. 272, 260, 266, 267 | Rs 100/- |
| T.B Cottage No 71 row III Nos 136 and 152 | Rs 100/- |
| Ruia cottage, Gogineni cottage & A T C. No. 99 | Rs. 100/- |
| Chidambaram Chettiar Cottage | Rs. 100/- |
| Sri Seetharama Kalyana Mandapam | Rs. 1,000/- |

*Dy Executive Officer (R), T T. Devasthanams, Tirumala may be addressed for reservation.*

| | |
|---|---|
| Rambageecha Guest House<br>Seshadri Nagar Guest House | Rs. 50/- per Suite |

## ACCOMMODATION AT TIRUPATI

**Free Accommodation:**

Sri Govindaraja Dharmasala and Sri Kodanda Rama Dharmasala situated on the northern side of the Tirupati Railway Station provide unfurnished accommodation with cooking facilities to pilgrims. Pilgrims on arrival may contact the Superintendent, Central Reception office at the Dharmasala **Phone No. 20991**

**Furnished Accommodation:**

*Sri Venkateswara Dharmasala,* Opposite Railway Station.
*Service Charges Daily*

| Single | Double | Four beds |
|---|---|---|
| Rs 20 | Rs 30 | Rs. 40 |

Please contact Superintendent **Phone No. 20103**

*Sri Venkateswara Guest House* on the Northern side of the Railway Station

Rs. 30/- per suite

Please contact Asst. Executive Officer (Reception) Tirupati.
**Phone No. 20166**

*Sri Padmavathi Guest House* (air - conditioned) Chittoor **Road.**

| | |
|---|---|
| Big Suite | Rs 65/- |
| Single Suite | Rs 40/- |

Please contact Asst. Executive Officer (Reception) Tirupati
**Phone No. 20103**

**Conditions**

* Day means 24 hours from the time of allotment.
* Alternate accommodation will be provided if the accommodation required is not available Excess amount from the service charges paid for one category of accommodation, but adjusted towards the alternate accommodation provided, will be refunded
* Reservation will be made for one day only If the party does not turn up the reservation will be cancelled and the reservation charges paid will neither be refunded nor adjusted for the subsequent period.
* During peak season reservation will be restricted to one day **only.**
* **Three times of the normal rent will be charged as penalty in case the occupant continues to stay beyond the time specified.**

# எண்களைப் பற்றிய எண்ணங்கள்

திரு. லா. ஸ்ரீநிவாஸன்
புதுதில்லி.

"கண்ணுள் நின்றகலான் கருத்தின் கண் பெரியன், எண்ணில் நுண் பொருள் ஏழிசையின் சுவை தானே" என்பது நமமாழ்வாரின் பாசுரம் (திருவாய் மொழி 10-8-8). இங்கு "எண்ணில் நுண் பொருள்" என்பதன் கருத்து வருமாறு. "எத்தனை தூரம் ஆராய்ந்து பார்த்தாலும் இது (எம்பெருமான் அடியேனைப் பரம பதம் கொண்டு போக விரைவது) புரிந்து கொள்ள முடியாத ஸூக்ஷ்ம விஷயமாயுள்ளது. அவனுடைய பாரிப்பு நம்மால் வாய் கொண்டு சொல்ல வொண்ணாதது மாத்திரமன்று, நெஞ்சுக்கும் எட்டாதபடி கடினமானது. ஆயினும், பெரியோர் இங்கு வேறொரு அர்த்தமும் கூறுவதுண்டு. அதாவது ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணிக் கொண்டு போனால், 24 ப்ரக்ருதி தத்வங்களுக்குப் பிறகு 25 என்னும் எண் ஜீவனையும், 26 என்னும் எண் பகவானையும் குறிக்கிலறன. இவ்விதம் நாம் நினைக்காவிடினும், 26 என்ற எண்ணில் நுண் பொருளாக எம்பெருமான் அமைந்துள்ளான் என்றபடி. இதிலிருந்து நம் மதத்திற்கு அநுகுணமாக எண்களைப் பற்றிய சில எண்ணங்கள் உதிக்கின்றன.

விசிஷ்டாத்வைதத்தில் ப்ரஹ்மம் என்ற தத்வம் ஒன்றே. ஸ்ருஷ்டிக்கு முன் அது ஸூக்ஷ்ம சிதசித் விசிஷ்டமாயும், ஸ்ருஷ்டிக்குப் பிறகு ஸ்தூல சிதசித் விசிஷ்டமாயுமுள்ளது. அதாவது, ஸ்ருஷ்டிக்கு முன் சேதநாசேதநங்கள் நாம ரூபங்களால் தனித்து அறிய முடியாதபடி எம்பெருமானுடன் ஒன்றியிருந்தன. ஸ்ருஷ்டிக்குப் பின் அவை நாம ரூபங்களால் தனித்து அறிய முடியும்படி ஆயின. இரு தசைகளிலும் அவை எம்பெருமானுக்குச் சரீரங்களாக உள்ளன. ஆகையால் சரீரியாகிய பகவான் ஒருவனே தத்வம்.

லக்ஷ்மியும் நாராயணனுமாகிய இருவருமே நமக்குத் தஞ்சம் என்பதை ஸ்வாமி தேசிகன் அடிக்கடி உபதேசிக்கிறார். சரணாகதியில் உபயோகப்படும் த்வயம் என்ற மந்த்ரம் கடவல்லியில் இரண்டு பாகங்களாக உள்ளது. அவற்றைச் சேர்த்தே அநுஸந்திக்க வேண்டும். இதை ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில், இது "கடவல்லியிலே பிரிய ஓதிச் சேர்த்து அநுஸந்திக்க விதிக்கையாலும்" என்று அருளியுள்ளார். மேலும் "இம் மந்த்ரம் உபாய உபேயமான த்வயத்தை ப்ரதிபாதிக்கையாலே த்வயம என்று பேர் பெற்றது" என்றும் ஸாதித்துள்ளார். இதை மந்த்ர ரத்னம் என்று கொண்டாடுவர். தமக்கு மூன்று ரத்னங்கள் முக்கியம். அவற்றுள் த்வயம் ஒன்று. மற்ற இரண்டும் புராண ரத்னம் என்ற ஸ்ரீவிஷ்ணு புராணமும், ஸதோத்ர ரத்னம் என்ற ஆளவந்தார் அருளிய ஸதோத்ரமும ஆகும். இவற்றுள் புராண ரத்னம் ஸ்தோத்ர ரத்னத்தால் போறறப்பட்ட பெருமையுடையது.

த்ரிவிக்ரமனின் மூனறு அடி வைப்புகளை வேதம் வாய் வெருவுகிறது. நம் ஸித்தாந்தத்தின் அடிப்படையான சித், அசித், ஈச்வரன் என்ற தத்வத்ரயத்தை ச்வேதாச்வதர உபநிஷத் भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा என்று ஆதரிக்கிறது. இவற்றுள் போக்தா என்பவன் அநுபவிக்கும் ஜீவன், போக்யம் என்பது அவனால் அநுபவிக்கப்படும் அசேதன ப்ரக்ருதி, ப்ரேரிதா என்பவன் அந்த ப்ராக்ருத விஷயங்களைச் சேதனனுக்கு போக்யமாக ஆக்கும் ஈச்வரன். இம்மூன்றின் உண்மையையும் அவற்றின் பரஸ்பர ஸம்பந்தங்களையும் சரிவர அறிபவனே மோக்ஷத்தை அடைய முடியும். இவற்றுள் சேதனான ஜீவன் நித்யன், முக்தன், பத்தன் என்று மூன்று விதம் ஆவான். ஸம்ஸாரத்தில் ஒரு போதும் உழலாத அனந்த, கருட விஷ்வக்ஸேநாதிகள் நித்யர்கள். ஸம்ஸாரத்திலிருந்து மோக்ஷம் அடைந்தவன் முக்தன். ஸம்ஸாரத்திலே இன்னும் இருப்பவன் பத்தன். அசேதனமும் ப்ரக்ருதி, காலம், சுத்த ஸத்வம் என்று மூவகைப்படும். ப்ரக்ருதிக்கு ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்கள் உள்ளன. சேதநாசேதனங்களுடைய ஸ்வரூபம் (தானாயிருக்கும் தன்மை), ஸ்திதி (நிலைத்திருத்தல்), ப்ரவ்ருத்தி (செயலில் முற்படுதல்) ஆகிய மூன்றும் எம்பெருமானுக்கு அதீனம். இதைச் சுருக்கமாக स्वाधीन त्रिविध चेतनाचेतन स्वरूप स्थिति प्रवृत्ति भेदं என்று ஆளவந்தாரும் எம்பெருமானாரும் அருளினர். இதன் பொருளை விளக்க ஸ்வாமி தேசிகன் "தத்வ ஸந்தேசம்" என்ற ஓர் ரஹஸ்யத்தை அநுக்ரஹித்துள்ளார். ப்ரணவத்தில் अ, उ, म என்ற மூன்று அக்ஷரங்கள் உள்ளன. அவற்றுள் अ பகவானையும், उ பகவானுக்கும் ஜீவனுக்குமுள்ள ஸ்வாமி தாஸன் என்ற உறவையும், म ஜீவனையும் உணர்த்துகின்றன. வித்யை, தனம், ஆபிஜாத்யம் (நற்குடிப் பிறப்பு) ஆகிய மூன்றாலும் ஏற்படும் கர்வத்தை முக்குறும்பு என்பர். இவற்றை அறவே ஒழித்ததால் கூரத்

## சந்தாதாரர்களுக்கு...

31-7-90—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எணகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். புகார்களுக்கும்,விவரங்களுக்கும் 'ஆசிரியர்'ஸப்தகிரி,தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

78 208 211 333 341 342 346 352 353 362 544 558 732 743 முதல் 746 1663 1716 1722 1744 1753 1755 1759 1769 1774 1801 1802 1807 1907 2729 2890 3146 3164 3166 3170 3175 3180 3187 3191 3194 3196 3213 4357 4415 4416 4425 4436 4444 4826 5414 5704 முதல் 5706 5708 முதல் 5713

தாழ்வான் முக்குறும்பறுத்தவர் என்று போற்றப்படுகிறார். அஷ்டாக்ஷரம், த்வயம், சரமச்லோகம் என்ற மூன்று மந்த்ரங்களும் சேர்ந்து ரஹஸ்ய த்ரயம் என்று குலாவப்படுகின்றன.

தர்மார்த்த காம மோக்ஷங்களாகிய நான்கு புருஷார்த்தங்களையும் நான்கு திருக்கரங்களால் வாரி வழங்குவதற்காக எம்பெருமான் சதுர்புஜனாகத் திகழ்கிறான். பகவானை பஜிப்பவர்கள் ஆர்த்தன் (இழந்த செல்வத்தை விரும்புகிறவன்), ஜிஜ்ஞாஸு (கைவல்யததை அல்லது ஆத்மாநுபவத்தை விரும்புகிறவன்), அர்த்தார்த்தி (புதுச் செல்வத்தை விரும்புகிறவன்) ஜ்ஞானீ (எம்பெருமானையே உபாயமும் உபேயமுமாக அறிந்தவன்) என நான்கு விதமாக கீதையில் ஓதப்படுகின்றனர். ஆளவந்தார் அருளிய சதுச்லோகியில் நான்கே ச்லோகங்கள் இருந்தாலும் அவை சாரீரக சாஸ்த்ரத்தின் நானகு அத்யாயங்களில் சொல்லப்பட்ட அர்த்தங்களைத் தெளிவாகக் கூறுகின்றன என்று ஸ்வாமி தேசிகன் சதுச்லோகீ பாஷ்யத்தில் காட்டியுள்ளார். திருமங்கை மன்னன் ஆசுகவி, சித்ரகவி, மதுரகவி, விஸ்தாரகவி என்ற நான்கு விதமான கவித்திறமை பெற்றிருந்ததால் அவரை நாலுகவிப்பெருமாள் என்று கூறுவர். ஸ்ரீ பாஷ்யம், கீதா பாஷ்யம், பகவத் விஷயம், ரஹஸ்ய த்ரயஸாரம் ஆகிய நான்கும் க்ரந்த சதுஷ்டயம் என்று கூறப்பெறும். ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவனும் இவற்றைக்காலக்ஷேபம் செய்வது அவச்யம்.

நமது கோயில்களில் எம்பெருமானின் திருவாராதனம் பாஞ்சராத்ர, வைகாநஸ ஆகமங்களை அடிப்படையாகக் கொண்டவை. இவற்றுள் பாஞ்சராத்ரம் ஐநது இரவுகளில உபதேசிக்கப்பட்டதால அப்பெயா பெற்றது என்பா. அப்பெயருக்கு மறறும் அனேக காரணங்கள உள்ளன. பாஞ்சராத்ரத்தின்படி ஸ்ரீ வைஷ்ணவனின தினம் ஐநது பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அபிகமனம் (காலைக் கடன்களை முடித்துக் கொண்டு எம்பெருமானை சரணம் அடைதல்), உபாதானம் (திருவாராதனத்திற்கு வேண்டிய பொருள்களை சேமித்தல்), இஜ்யை (பகவதாராதனம்), ஸ்வாத்யாயம் (வேதம ஓதுதல்), யோகம் (பகவானை மனதில் கொண்டு நித்திரை செய்தல்) என்ற ஐந்து க்ரியைகள் அந்த ஐந்து காலங்களில் முறையே செய்ய வேண்டியவை. இவ்விதம் அநுஷ்டிப்பவரைப் பஞ்சகால பராயணர் என்பர். இவர்களை "இருமுப்பொழுதேத்தி எல்லையில்லாத் தொன்னெறிக் கண் நின்ற தொண்டர்" என்று குலசேகராழ்வார் வர்ணிக்கிறார். மேலும் ஸ்ரீ வைஷ்ணவன் தனது ஆசார்யனிடம் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெறுகிறான். அவை யாவன: (1) தாபம்-அக்னியில் காய்ச்சியவையும் எமபெருமானுடைய சின்னஙகளுமான சங்கு சக்ரங்களைத் தரித்துக கொள்வது; (2) புண்ட்ரம்-பன்னிரு நாமங்களை அணிந்து கொள்வது; (3) நாமம-எம்பெருமானுடைய அடியன் என்று அறிவிக்கும் நாமாவைப் பெறுதல்; (4) மந்திரம்-அஷ்டாக்ஷரம், த்வயம், சரமச்லோகம் என்ற மந்த்ரங்களை உபதேசிக்கப் பெறுதல்; (5) இஜ்யை-பகவதாராதன மந்த்ரத்தை உபதேசிக்கப் பெறுதல். எம்பெருமானின் ஐந்து திவ்யாயுதங்களைப் பற்றிய பஞ்சாயுத ஸ்தோத்ரம் நமக்கு முக்யமானது. அதை ஸஹஸ்ர நாமத்துடன அநுதினமும் அநுஸந்திப்பது ஸ்ரீ வைஷ்ணவ வழக்கு. ஸ்ரீவைகுண்ட ஸ்தவம், அதிமாநுஷஸ்தவம், ஸுந்தர பாஹுஸ்தவம், வரதராஜ ஸ்தவம், ஸ்ரீவஸதவம ஆகிய ஐந்தும் பஞ்ச ஸ்தவங்கள் என்று வழங்கப்படும. இவை கூரத்தாழ்வான் அருளியவை. प्राप्यस्य ब्रह्मणो रूपं என்ற ப்ரமாணத்தின்படி நாம் அறிய வேண்டிய அர்த்தங்கள் ஐந்து. அவையாவன — அடைய வேணடிய எம்பெருமானின ஸ்வரூபம் (தன்மை), அவனை அடையும் ஜீவனின ஸ்வரூபம், அடைவிக்கும் உபாயம், அதன் பயன், அடைவதற்கு விரோதியாயிருப்பது ஆகியவை. இவற்றைப் பறறி "அர்த்த பஞசகம்" என்று ஸ்வாமி தேசிகன்

தமிழில் ஓர் பாசுர க்ரந்தம் அருளி யுள்ளார். பகவானின் திருமேனியும் அர்ச்சா விக்ரஹங்களும் பஞ்சோப நிஷத் என்று சொல்லப்பட்ட அப் ராக்ருத சுத்த ஸத்வமயமான பஞ்ச பூதங்களால் ஆனவை என்பது நூல் கொள்கை.

பதினெட்டுப் புராணங்களில் ஸ்ரீ விஷ்ணு புராணம், நாரதீயம், பாக வதம், கருட புராணம், பாத்ம புராணம், வராஹ புராணம் ஆகிய ஆறும ஸாத்விகபுராணங்கள். இவையே எம்பெருமானின் பெருமை களை சரிவர விளக்குகின்றன. ஆக, இவையே ஆதரிக்கத் தக்கவை. ஸுதர் சன பகவானை அறுகோணமுள்ள வட்டத்தில் உபாஸிக்கின்றனர். காமம், க்ரோதம், மோஹம், லோபம், மதம், மாத்ஸர்யம் ஆகிய ஆறையும் ஷடூர்மிகள் என்பர். ஸம்ஸாரமாகிய ஸமுத்ரத்தில் தோன்றும் அலைகள் இவை. இவற்றைக் கடந்து மோக்ஷம் அடைய முயல்வது நமது கடமை. பாஷ்யகாரருக்கு வரதன் திருக்கச்சி நம்பியின்மூலம் ஆறு வார்த்தைகள் அருளினான். அவையாவன! (1) நானே பரம்பொருள்; (2) ஜீவனுக் கும் ப்ரஹ்மத்துக்கும் பேதம் உண்மை; (3) மோக்ஷத்திற்கு உபா யம் ப்ரபத்தியே; (4) மஹாபூர்ணர் என்ற பெரிய நம்பியை ஆசார்யனாக அடை; (5) ப்ரபன்னனுக்கு அதே ஜன்மத்தின் முடிவில் மோக்ஷமுண்டு; (6) அவனுக்கு அந்திம ஸ்ம்ருதி அவசியமில்லை. அதாவது இறக்கும் தருவாயில் பக்தி யோக நிஷ்டனைப் போல் தன் முயற்சியால் எம்பெரு மானை மனத்தினால் நினைக்க வேண் டும் என்ற நியமமில்லை. பகவானே அவனுக்குத் தன் நினைவை அவச்யம் வரும்படி அருள்கிறான்.

"ஏழாட் காலம் பழிப்பிலோம் நாங்கள்" என்றும், "எந்தை தந்தை தந்தை தந்தை தம் மூத்தப்பன் ஏழ் படி கால் தொடங்கி" என்றும் பெரி யாழ்வார் அருளியபடியே ஸ்ரீ வைஷ் ணவர்கள் ஏழேழ் தலை முறையாக



ஆதிகேசவப்பெருமாள் - திருவட்டாறு.

எம்பெருமானுக்கே அடிமை செய் பவர்கள். "எற்றைக்கும் ஏழேழ் பிற விக்கும் உன் தன்னோடு உற்றோமே யாவோம் உனக்கே நாம் ஆட் செய் வோம்" என்றாள் அவருடைய அரு மைப் புதல்வி ஆண்டாள். "கேசவன் தமர்கீழ் மேலெமர் ஏழேழு பிறப்பும்" என்ற பாசுரத்தில் நம்மாழ்வார் அருள்கிறார். 'எனக்கு உபகாரக னாய், எனது ஸ்வாமியான நாராய ணனாலே என்னைச் சேர்ந்தவர்கள் கீழும் மேலுள்ள ஏழேழ் பிறப்புகளி லும் அவனுடைய அடியார்களாகப் பெற்றார்கள். இப்படிப்பட்ட பெரிய சிறப்பை அடைந்து நமது வாழ்ச்சி வளருகிறபடி எனனே", இங்கு कुलं तारयते सप्त सप्त च सप्तच என்ற ப்ர மாணமும் காண்க.

எட்டு எழுத்துககளைக் கொண்ட அஷ்டாக்ஷரம் என்ற மஹா மந்த்ரம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு மிகச் சிறந்த தாகும். இதன் பெருமைகளை ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் ஸ்வாமி தேசிகன் "எட்டு மாமூர்த்தி" என்ற பாசுரத்தில் எட்டு என்னும் எண்ணைப் பலமுறை உபயோகித்து விளக்கியுள் ளார். அதற்குத் தாமே வ்யாக்யான மும் அருளியுள்ளார். எட்டு திருக்கை களையுடைய அஷ்டபுஜத் தெம்பெரு மானுக்கு எட்டு ச்லோகம் கொண்ட அஷ்டபுஜ அஷ்டகமே தகும் என்று தேசிகன் திருவுள்ளம் போலும். "செண்பக மல்லிகையோடு செங்கழு நீர் இருவாட்சி எண்பகர் பூவும் கொணர்நதேன்" என்று எட்டுவித மான புஷ்பங்களைச் சூட்ட வரு மாறு மண் பகர் கொண்டானை ஆய்ச்சி மகிழ்ந்துரை செய்ததை, பண் பகர் வில்லிபுத்தூர் கோன் பட்டர்பிரான் பாட்டாக அருளி னார். अहिंसा प्रथमं पुष्पं என்று தொடங் கும ப்ரமாணத்தினபடி அஹிம்ஸை, புலனடக்கம், எல்லா ப்ராணிகளிட மும் இரக்கம், பொறுமை, ஜ்ஞானம், தவம், த்யானம், ஸத்யம் ஆகிய எட்டு ஆத்ம குணங்களும் விஷ்ணு வுக்கு ப்ரீதியை உண்டாக்கும் சிறந்த புஷ்பங்களாம்.

வேதார்த்த ஸங்க்ரஹம், ஸ்ரீ பாஷ் யம், வேதாந்த ஸாரம், வேதாந்த தீபம், கீதா பாஷ்யம், சரணாகதி கத்யம், ஸ்ரீரங்க கத்யம், வைகுண்ட கத்யம், நித்யம் ஆகிய பாஷ்யகார ரின் ஒன்பது க்ரந்தங்களையும் நாம் நவரத்னங்களாகவும் நவநிதிகளாக வும் போற்றி வருகிறோம். பரமபத ஸோபானத்தில் வைகுண்டத்தை



ஸ்ரீ லக்ஷ்மி தேவி
—திரு இராகவன், திருப்பதி

அடைவதற்கு ஸ்வாமி தேசிகன் ஒன்பது படிகளை வகுத்துள்ளார். அவை யாவன—விவேகம், நிர்வேதம், விரக்தி, பீதி, ப்ரஸாதனம், உத்க்ரமணம், அர்ச்சிராதி, திவ்ய தேசப்ராப்தி, ப்ராப்தி என்பவை (எம்பெருமான் திருவடிகள் விஷயமான விவேகம், வீணான நாட்களைக் குறித்து வருத்தம், விஷயாநுபவத்தில் வைராக்யம், கர்ம கூடத்துக்குப் பயப்படுதல், எம்பெருமானின் அருளைப் பெறுதல், சரீரத்தைவிட்டுக் கிளம்புதல், அர்ச்சிராதி மார்க்கம் மூலம் செல்லுதல், ஸ்ரீ வைகுண்ட தேசத்தை அடைதல், எம்பெருமானைக் கிட்டி அணுகுதல் என்றபடி) ஒன்பதுவித பக்திகளைப் ப்ரஹ்லாதன் श्रवणं कीर्तनं विष्णोः என்று தொடங்கி விளககியுள்ளான்.

பகவானின் அனேக அவதாரங்களில் முக்யமானவை பத்து. அவை தசாவதாரங்கள் என்று ப்ரபலம். ஆழ்வார்களின் எண்ணிக்கை 12. ஸ்ரீ வைஷ்ணவர்கள் த்வாதச (12) புண்ட்ரங்களை அணியக்கடவர்கள். கீதையில் 18 அத்யாயங்கள் உள்ளன. எம்பெருமானை உபாஸிக்க 32 வித்யைகள் உபநிஷத்துக்களில் ஓதப்பெற்றுள்ளன. பகவத் ஸந்நிதானத்தில் தவிர்க்கவேண்டிய அபசாரங்கள் 32 என்று வராஹ புராணம் கூறும். ஸ்ரீமத் ரஹஸ்ய ஸாரத்தில் 32 அதிகாரங்களும், ஸ்ரீபாதுகா ஸஹஸ்ரத்தில் 32 பத்ததிகளும் உள்ளன.

எம்பெருமானிடம் ஜீவனுக்குள்ள பற்றையும் பற்றிலாமையையும் 63, 36 என்ற எண்கள் உணர்த்துகின்றன என்பர். ஜ்ஞானம், பலம், ஐச்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்ற ஷாட்குண்யனான பகவானை 6 என்ற எண் குறித்தல் தகும். அதே போல் ஸத்வம், ரஜஸ்தமஸ் ஆகிய மூன்று குணங்களுக்கு வசமான ஜீவனை 3 என்ற எண் குறிக்கும். 63, 36 ஆகிய இரண்டு எண்களிலும் 6, 3 ஆகிய இரண்டும் இருந்த போதிலும், 36 நம் போல்வார் நிலையைக் காட்டுகிறது. இங்கு 3ம் 6ம் ஒன்றை ஒன்று பாராமல், புறங்காட்டி நிற்கின்றன. நாம் பகவானிடம் விமுகராக இருப்பதற்கு இது எடுத்துக் காட்டு. ஆகவே 63 ஆகும் போது ஒருவரை ஒருவர் நேராகப் பார்ப்பதும், ஸ்நேஹமாக இருப்பதும் போலத் தோன்றுகிறதல்லவா? நாம் நமது வழியை மாற்றிக் கொண்டு எம்பெருமானை எதிர் நோக்கினால் அவன் நம்மை அவச்யம் கடாக்ஷிப்பான்.

எம்பெருமானின் திவ்ய தேசங்கள் 108. பகவானை 108 நாமாக்களைக் கொண்ட அஷ்டோத்தர சதத்தினால் அர்ச்சனை செய்கிறோம் நாராயண சப்தத்திற்கு 108 அர்த்தங்களை அருளி ஸ்வாமி தேசிகன் நம்மை வியக்கச் செய்கிறான்.

எண்களில் ஒற்றை இரட்டை என்றுள்ளது யாரும் அறிந்ததே. 'தெள்ளியார் பலர்' என்ற பதிகத்தில் ஆண்டாள் கூடலிழைத்து தான் பகவானை அடைவாளா மாட்டாளா என்று சகுனம் பார்க்கிறாள். கூடலிழைப்பதாவது—வட்டமாக கோடு கீறி அதற்குள்ளே சுழி சுழியாகச் சுற்றும் சுழித்து, இரண்டிரண்டு சுழியாகக் கூட்டிப் பார்க்கும்போது இரண்டைக் கணக்காக முடிவு பெற்றால் கூடுகை, ஒற்றைக்கணக்காக முடிவு பெற்றால் கூடாமை என்று ஒரு ஸங்கேதம் ஏற்படுத்திக் கொணடு குறி பார்க்கையாம். திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் 'அழைப்பன் திருவேங்கடத்தானைக் காண, இழைப்பன் திருக்கூடல் கூட' என்று அருளியதும் காண்க.

திருச்சந்தவிருத்த ஆரம்பத்தில் 'ஆறுமாறுமாறுமாய் ஒரைந்துமைந்துமைந்துமாய்' என்றாப்போல் எண் மயங்களாகவே உள்ளன. இவைகளின் பொருளை முன்னோர்களின் வ்யாக்யானங்களைக் கொண்டே அறிய முடியும். உடலில் எட்டு கோணல்கள் இருந்த அஷ்டாவகரர் சிறு வயதிலேயே அரச சபையில் ஆஸ்தான வித்வானை எண்களைப் பற்றிய வாதத்திலேயே வென்றார் என்று மஹா பாரதத்தில் காண்கிறோம்.

இவ்விதம் எண்கள் வாழ்க்கையில் ஓர் முக்யமான அம்சமாயுள்ளன. யசோதையிடம் கண்ணனைப் பற்றி பலவிதம் முறையிட்ட ஆய்ச்சிகள் கடைசியில் "இவையும் சிலவே" என்றனர். "உன் மகன் தன்னை யசோதை நங்காய் கூறிக்கொள்ளாய் இவையும் சிலவே" என்பது பெரியாழ்வார் பாசுரம். அதுபோல எண்களைப் பற்றிய எண்ணங்கள் எண்ணற்றவை; அவற்றுள் இவையும் சிலவே.



Edited and Published on behalf of the T. T. Devasthanams by K. Subba Rao, M.A. and Printed at T. T. D. Press by M Vijayakumar Reddy Manager, T. T. D. Press Tirupati-517501

